

மணம் பரப்பும் பாதையில்...
சந்தனா துணிகரச் செயல்களை செய்யத் துடிப்பவள். கோடை விடுமுறையைக் குடும்பத்துடன் குடகில் கழிக்கிறாள். ஒருநாள் அருகிலுள்ள காட்டிற்குள் செல்கிறாள். அது சந்தனக் காடு என்பது அவளுக்குத் தெரியாது - ஒரு சந்தன மரம் அவளோடு பேசும் வரை.
தமிழ்நாடு, கர்நாடகத்தில் சந்தன மரம் மிகுதியாக வளர்கிறது என்பது உங்களுக்குத் தெரியுமா? அதன் அறிவியல் பெயர் சந்தாலம் ஆல்பம் கர்நாடகத்தின் தார்வாட், ஷிமோகா, சிக்மகளூர், மெர்க்காரா, மைசூர், பெங்களூர் பகுதிகள் முக்கிய சந்தன உற்பத்தி மையங்கள் ஆகும்.
சுமார் 2500 வருடங்களாக நான் இந்தியாவில் வளர்வது உனக்குத் தெரியுமா? ஹைதர்அலி, திப்பு சுல்தான் ஆட்சிக்காலத்தில் சந்தன மரத்தை மைசூர் அரசின் சொத்தாக அறிவித்தனர்.
ஓ! அப்ப நீ சிறப்புப் பொருந்திய மரம்னு சொல்லு!
சந்தன மரம் ஏன் சிறப்புப் பெறுகிறது தெரியுமா? ஏனெனில் அது நமக்குப் பலவிதத்தில் பயன் தருகிறது. அவற்றில் சில இங்கு சித்தரிக்கப் பட்டுள்ளன. அவற்றை உங்களால் கண்டுபிடிக்க முடிகிறதா?
A
B
C
D
E
உங்கள் இல்லங்களில் கடந்த 80 ஆண்டுகளாக சந்தனத்தின் மேன்மையை மைசூர் சாண்டல் இல்லம் கூறிப் பரப்பி வருகிறது.
Mysore Sandal Soap
Baby


A
ACTIVE
B
BUZZ
BOSS
C
CADET DX
D
DEVIL DX
E
ELEPHANT
F
FISH
G
GIRAFFE
H
HEN
I
INSECT
J
JOKER
K
KIDD DX
L
LI'L ANGEL
LAMBADA
LIMBO
M
MISSILE
MISS INDIA Jr
N
NEST
O
ORANGE
P
PIRANHA
Q
QUEEN Jr
R
ROBO COP
S
SPARKY
SALSA
T
TERMINATOR
V
W
HERO CYCLES
The largest range of kids bikes
HERO CYCLES
THE ABC OF CYCLING

















# பொருளடக்கம்



இப்பத்திரிகையில் விளம்பரங்களை வெளியிடத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**சென்னை**
Ph: 044-234 7384
234 7399
**e-mail : advertisements@chandamama.org**

**டில்லி**
மோனா பாட்டியா
Ph: 011-651 5111
656 5513/656 5516

**மும்பை**
ஷகீல் முல்லா
Mobile: 98203-02880
Ph: 022-266 1599
266 1946/265 3057

**SUBSCRIPTION**

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**
***Remittances in favour of Chandamama India Ltd.***
to
Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony,
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail : subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**
இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத்தபால் வாயிலாக
பனிரெண்டு இதழ்களுக்கு ரூ 900
இந்தியாவிற்குள் ரூ 120
**புக்போஸ்டில்**
உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணி யார்டரிலோ சந்தமாமா இந்தியா லிமிடெட் என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# பூமியை அழிப்பது யார்? காப்பது யார்?

பூமிக்குப் பல பெயர்கள் உண்டு. தர்த்தி, வசுந்தரா, பிருத்வி என்பன அவற்றில் சில. அதற்குப் பிருத்வி எனப் பெயர் வந்த காரணத்தைக் கூறுகிறோம்.

ஒரு காலத்தில் பூவுலகில் மக்கள் சந்தோஷமாக இருந்தார்கள். பூமியை உழுது பலவித பயிர்களை விளைவித்தார்கள். மழையையும் பயிர்களையும் அளிக்கும் தேவதைகளை வணங்கி யாகங்கள் புரிந்து அவர்களைத் திருப்திப்படுத்தினார்கள். இந்நிலையில் பூதலம் ஒரு ராட்சஸனின் ஆட்சியின் கீழ் வந்தது. அவன் தன்னையே கடவுள் என அறிவித்து, கடவுளுக்கு அர்ப்பணிப்பனவற்றை எல்லாம் தனக்கே கொடுக்க வேண்டும் என்று சட்டளை இட்டான். சாதுக்களும் முனிவர்களும் அவனுக்கு அறிவுரைகள் கூறிப் பார்த்தும் அவன் அவற்றை ஏற்காததால் அவனுக்கு சாபம் கொடுத்து அவனை அழித்துவிட்டார்கள். அதனால் பூதலத்தை ஆள மன்னனே இல்லாது போயிற்று.

பூவுலகில் மழை பெய்யவில்லை. பயிர்கள் விளையவில்லை. பஞ்சம் தலைவிரித்து ஆடியது. சாது சன்னியாசிகள் கடும் தவம் புரியவே, அதன் பயனாக ஓர் அரசகுமாரன் தோன்றினான். பூதேவி தன் மக்களை கவனிக்கவில்லை என்று அவன் அவளைக் கடிந்து கொண்டான். பூதேவியோ அந்த நிலை ஏற்பட மக்களே காரணம் என்று கூறினாள். அதுகேட்டு அந்த அரசகுமாரன் பூதலத்தைப் பேணிப் பாதுகாக்க தக்க நடவடிக்கைகளை மேற்கொண்டான். அந்த அரசகுமாரனின் பெயர் பிருது. அதனால் பூதலத்திற்குப் பிருத்வி என்ற பெயர் ஏற்பட்டது.

தற்காலத்தில் இயற்கையை அழிக்க எந்த ராட்சஸனும் இல்லாது போனாலும் நாம் தாம் அதை அழித்துக் கொண்டிருக்கிறோமே. இதைச் சரி செய்ய பிருத்வி போன்ற ஓர் அரசகுமாரன் வரவேண்டும் என்று காத்துக் கொண்டிருக்க வேண்டாம். நாமே இந்த பூமியைப் பாதுகாப்போம். இதற்கான வழியை நமது இணை இதழான வசுதா விளக்குகிறது. உலக சுற்றுப்புறச் சூழல் நாளான ஜூன் 5ன் தொடர்பாக இந்த இணை இதழ் வசுதா வெளியிடப்பட்டுள்ளது.

ஆசிரியர் : **விஸ்வம்**

**Visit us at : http://www.chandamama.org**






# மர்மக் குளம்

## 4

(ஆலமரத்தருகே இருந்த புதரிலிருந்து சித்தசாதகன் ஓர் ஓலைச் சுவடியைக் கண்டெடுத்தான். ஆனால் இளவரசனையும் இளவரசியையும் பற்றிய தகவல் எதுவும் கிடைக்கவில்லை. அதனால் ஜெயசீலனும் சித்தசாதகனும் அவர்களை மலைப் பகுதியில் தேடிக் கொண்டு சென்றனர். வழியில் ஒரு கிராமத்தவர் தம் வயல்களை அழிக்க வந்த ஒரு யானையையும் அதன் மீது அமர்ந்திருந்த முதலை வடிவ மனிதன் ஒருவனைத் தாக்குவதையும் கண்டார்கள். அப்போது - )

தம்மைத் தாக்க முதலை வடிவ மனிதன் யானை மீது அமர்ந்து வருவது கண்டு கிராமவாசிகள் பயந்து போனார்கள். அவர்கள் அங்கிருந்து ஓடிவிட முயலவே, யானை மீதிருந்த முதலை மனிதன், ''ஓடாதீர்கள். நான் யாரையும் எதுவும் செய்துவிட மாட்டேன்,'' என்று உரத்த குரலில் கூறினான். அதைக் கேட்ட கிராமவாசிகள் கொஞ்சம் தைரியம் அடைந்தார்கள். முதலை போலத் தோன்றினாலும் அவன் மனிதன் போலப் பேசியது அவர்களுக்குத் திருப்தியை அளித்தது.

ஆச்சரியப்பட்டு நின்ற அவர்களைப் பார்த்து அந்த முதலை மனிதன், ''உங்கள் கிராமத் தலைவர் யார்? எனக்கு உடனடியாக ஒரு வைத்தியர் வேண்டும் என்று நான் தகவல் அனுப்பினேனே. அதன்படி ஒரு வைத்தியரைக் கூட்டி வந்திருக்கிறாரா?'' என்று கேட்டான்.

கிராம மணியகாரரும் முன்வந்து, ''எனக்குத் தகவல் கிடைத்தது. என்னுடன் கிராம வைத்தியனும் அவனது உதவியாளனும் வந்திருக்கிறார்கள். யாருக்கு என்ன நோய் எனச் சொன்னால் அவர்கள் நோயாளியைப்



ரும், ''மணி! முத்து!! இருவரும் இங்கே வாருங்கள்!'' என்று உரத்த குரலில் கூப்பிட்டார்.

மணியும் முத்துவும் மணியகாரரின் பக்கத்தில் வந்து நின்றார்கள். மணியகாரரும், ''மணி சாதாரண நோய்களுக்கு மருந்து கொடுப்பவன். முத்து அறுவை சிகிச்சை செய்பவன்,'' என்று அவர்களை முதலை மனிதனுக்கு அறிமுகப்படுத்தினார்.

அப்போது முதலை மனிதன் தன் தலையில் அணிந்திருந்த தலைப்பாகையை அகற்றவே, அவன் நாற்பது வயதான சாதாரண மனிதனாக இருப்பதை யாவரும் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். நல்ல நிறமாக, சுருண்ட கருத்த தலைமுடியுடன் இருந்தான்.

பார்த்துவிட்டுத் தக்க சிகிச்சையை அளிப்பார்கள்,'' என்றார்.

முதலை மனிதனும், ''வைத்தியர்களைக் கூட்டி வந்தது சரி. ஆனால் எனக்கு உணவு அளிப்பது பற்றி என்ன ஏற்பாடு செய்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

மணியகாரரும், ''ஐயா! எங்கள் ஊருக்கு வருபவரைப் பட்டினி போட்டு அனுப்பும் பழக்கம் எங்களுக்குக் கிடையாது. உங்களுக்காக விருந்து சாப்பாடே என் வீட்டில் தயாராகிக் கொண்டிருக்கிறது,'' என்றார்.

முதலை மனிதனோ, ''விருந்து சாப்பாட்டைப் பிறகு சாப்பிடலாம். முதலில் அந்த இரு வைத்தியர்களையும் இங்கே வரச் சொல்லுங்கள்,'' என்றான். கிராம மணியகார

அதைக் கண்ட வைத்தியன் மணி, ''ஓ! இவன் சாதாரண மனிதன் தானா!'' எனக் கூவினான். முத்துவோ, ''அப்படி எண்ணி ஏமாந்து போகாதே! ராட்சஸர்கள் தாம் விரும்பும் எந்த உருவையும் எடுத்துக் கொள்ளக் கூடியவர்கள். ஆனால் வைத்தியர்கள் நோயாளி யார் என பாகுபடுத்தாமல் சிகிச்சை அளிக்க வேண்டும். அதுதான் அவன் கடமை,'' என்றான்.

மணியும், ''நீ சொல்வது சரியே. முதலில் இவருக்கு என்ன நோய் உள்ளது என்பதைக் கண்டுபிடிப்போம்'' என்றான். அப்போது முதலை வடிவில் இருந்த மனிதன், ''எனக்கு நோய் என்று எதுவும் இல்லை. என் உடலில் உடைந்த கத்தி குத்தியுள்ளது. அதை எடுத்துவிட்டு மருந்து

வைத்துக் கட்டுப் போடவேண்டும்,'' என்றான்.

அப்போது முத்து, ''நான் எளிதில் இக்கத்தியை வெளியே எடுத்துவிடு வேன். ஆனால் அறுவைச் சிகிச்சைக் கான உபகரணங்களை இப்போது நான் எடுத்து வரவில்லையே. அவை என் வீட்டில் அல்லவா இருக் கின்றன'' என்றான்.

பிறகு அவன் யானை மீதேறி அந்த மனிதனின் உடலில் குத்தி உடைந்து போன கத்தியைப் பார்த்து ''இது ஏதோ அரச குடும்பக் கத்தி போல இருக் கிறதே!'' என்று மணியகாரரைப் பார்த்துக் கூறினான்.



அப்போது முன்பு முதலை வடிவில் இருந்தவன் ''ஆம். நீ சொல் வது சரியே! இது ஓர் அரசகுமாரனின் கத்தி தான். அந்த அரசகுமாரன் தனக்கு ஏதோ மிகவும் அதிக சக்தி உள்ளதாக எண்ணி என்னைத் தாக்கினான். நானும் அவனோடு சண்டை போட்டு அவனையும் அவனது சகோதரியை யும் சிறைப்பிடித்தேன். என்னுடன் வந்தவர்கள் என்னை இப்படியே விட்டுவிட்டு அந்த அரசகுமாரியை யும் அரசகுமாரனையும் கொண்டு போய் விட்டார்கள்,'' என்றான்.

அப்போது முத்து கிராம மணிய காரரிடம், ''ஐயா! இவரது உடலில் குத்தப்பட்ட அரசகுமாரனின் கத்தி உடைந்திருக்கிறது. இதை எப்படி யாவது இப்போது வெளியே எடுத்து விடுகிறேன். உடலுக்குள் உடைந்து போன கத்தியின் சிறு முனைப் பகுதி இருக்கும். அதை அகற்ற இவரை என் வீட்டிற்குத் தான் கொண்டு போக வேண்டும்,'' என்று உரத்த குரலில் கூறினான்.

முத்து ஏன் உரத்த குரலில் அவ் வாறு கூறினான் என்பதை கிராம மணியகாரர் புரிந்து கொண்டுவிட் டார். அரசகுமாரனின் கத்தி அந்த மனிதனின் உடலில் பாய்ந்து உடைந்து போனது என்றால் அந்த மனிதனுக்கும் அரசகுமாரனுக்கும் இடையே கடும் சண்டை நடந்திருக்க வேண்டும் என அவர் ஊகித்து விட்டார்.

மேலும் அரசகுமாரியையும் அரச குமாரனையும் கடத்திக் கொண்டு போன கூட்டத்தைச் சேர்ந்தவன் அவன் என்பதனையும் அவர் புரிந்து கொண்டார்.

அதனால் தன்னருகே நின்ற



மணியிடம் ,''மணி! நீ போய் காயத்தில் வைத்துக் கட்ட பச்சிலை களைப் பறித்து வா. அதற்குள் முத்து அவரது உடலிலுள்ள உடைந்த கத்தியை மெதுவாக எடுத்து வெளியே போட்டுவிடுவான். காயத்திலிருந்து ரத்தம் வடியாமல் இருக்க பச் சிலையை வைத்துக் கட்டி இவரை நம் கிராமத்திற்குக் கொண்டு போய் முழு சிகிச்சையை அளிக்கலாம்,'' என யாவருக்கும் கேட்கும்படிக் கூறினார்.

அந்த காயமுற்ற அந்த மனிதன் முத்துவையும் கிராம மணியகார ரையும் மாறிமாறிப் பார்த்தான். பிறகு அவன் முத்துவிடம், ''வலி அதிக மாக இருக்கிறதே. நீ கத்தியை எடுத்து பிறகு அந்த வைத்தியன் கொண்டு வரும் பச்சிலையை வைத்துக் கட்டி னால் வலி போய்விடுமா?'' என்று கேட்டான்.

முத்துவும் ''ஓ! போய்விடும்'' என்று கூறும்போதே தொலை விலிருந்து மணியின் குரல் ''காப் பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்!'' எனக் கத்தியது அங்கே இருந்த யாவருக்கும் கேட்டது.

அதைக் கேட்ட காயமுற்றவன், தான் கழற்றி வைத்த முதலை வடிவத் தலைப் பாகையை எடுத்து அணிந்து கொண்டு தனது யானையை மணி யின் குரல் வந்த திசையை நோக்கிப் போகச் செய்தான்.

யானை மீது அமர்ந்திருந்த முத் துவோ தட்டுத் தடுமாறியவாறே ''ஐயோ! எங்கே போகிறாய்?'' என்று நடுநடுங்கும் குரலில் கேட்டான். முதலை மனிதனும் ''பயப்படாதே. உன் தோழனான வைத்தியன் மணி யைக் காப்பாற்றவே போய்க் கொண் டிருக்கிறோம். அவன் அலறியதைக் கேட்டாயா? அவன் ஏதோ பெரிய ஆபத்தில் அகப்பட்டுக் கொண் டிருக்கிறான். அவனை நாம் காப் பாற்ற வேண்டும். அவன் பச்சிலை கொண்டு வந்து என் காயத்தில் கட்டினால் தானே என் காயம் ஆறி வலி இல்லாது போகும்'' என்றான்.

முதலை மனிதனின் யானை வேகமாகச் சென்றது. அது சற்று தூரம் போய் அங்கு ஓடிவந்த காட்டு யானை ஒன்றைக் கண்டு அதை பலமாகத் தாக்கியது.

அந்த யானை முதலை மனிதனின் யானையை ஓரிரண்டு நிமிடங்களே



எதிர்த்தது. ஆனால் அதற்கு மேல் தாக்குப் பிடிக்க முடியாமல் ஓட்டம் பிடித்தது. அந்தக் காட்டு யானை யோடு வந்த மற்ற யானைகளும் தம் சகா ஓடி வருவது கண்டு அவை கூட ஓட்டம் பிடித்தன.

இதற்குப் பிறகு முதலை மனிதன் தன் யானையை நிறுத்தினான். தன்னோடு யானை மீது இருந்த முத்து இல்லாததைக் கண்டு அவன் ''முத்து! எங்கே இருக்கிறாய்?'' என்று உரக்கக் கூவினான்.

முத்துவும் ''இங்கே தான் இருக் கிறேன். உங்கள் யானையின் வாலைப் பிடித்துக் கொண்டு தொங்கிக் கொண் டிருக்கிறேன்'' என்று பதில் குரல் கொடுத்தான்.

அதைக் கேட்டு முதலை மனிதன் சற்று நகர்ந்து கை கொடுத்து முத்து வைத் தூக்கித் தன் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு ''இனி நீ என் உடலிலிருந்து கத்தியை எடுக்க லாமே. உம், இப்போதே எடு'' என்றான்.

அதற்கு முத்து ''அவசரப்படாதீர் கள். நான் கத்தியை எடுத்தால் காயத்திலிருந்து ரத்தம் 'குபு, குபு' வென்று வெளியே வரும். அப்படி வருவதைத் தடுக்கும் பச்சிலை பறித்துவரத் தானே மணி வைத்தியர் சென்றார். அவரது குரலைக் கேட்டுத் தானே நாம் இங்கே வந்தோம். முதலில் அவரைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். பிறகு தான் உங் களுக்குச் சிகிச்சை செய்ய முடியும்'' என்றான்.

அதைக் கேட்ட முதலை மனிதன் ''நீயும் ஒரு வைத்தியன் தானே. நீ போய் பச்சிலைகளைப் பறித்து வந்து எனக்குச் சிகிச்சையை ஆரம்பி!'' என்றான்.

அதற்கு முத்து ''எனக்கு அறுவை சிகிச்சையில் காயங்களைச் சுத்தப் படுத்தத் தான் தெரியும். எங்கள் ஊரில் நான் காயங்களையோ அல் லது புண்களையோ அறுத்து சுத்தம் செய்வேன். மணி வைத்தியர் தான் அக்காயங்களை குணப்படுத்த மருந்து வைத்துக் கட்டுவார். இதுதான் எங்கள் பழக்கம்,'' என்றான்.

அதைக் கேட்ட முதலை மனிதன், ''சரி. இப்போதே அந்த மணி வைத்தியரைத் தேடிக் கண்டுபிடிப் போம்,'' எனக் கூறி அம்முயற்சியில் இறங்கினான்.



மணி வைத்தியனின் கூக்குரலை ஜெயசீலனும் சித்தசாதகனும் கேட்டனர். அவர்களும் அப்படிக் குரல் கொடுத்தவனைக் காப்பாற்ற விரைந்தார்கள். அப்போது அவர்கள் முதலை மனிதனின் யானை காட்டு யானையுடன் சண்டையிட்டு அதனைத் துரத்தியதைப் பார்த்தார்கள்.

சித்தசாதகன் தன் மந்திரத் தடியை ஆட்டியவாறே, ''ஜெயசீலா! நம் அரசகுமாரனையும் அரசகுமாரியையும் கடத்திச் சென்றவன் இவனே!'' என்றான். அப்போது மறுபடியும் மணி வைத்தியன் 'காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்!!' என அலறுவது அவர்களுக்குக் கேட்டது.

ஜெயசீலனும் ''இதோ, வந்துவிட்டோம்!'' என்று பதில் குரல் கொடுத்தான். இருவரும் அக்குரல் வந்த இடத்திற்குச் சென்றபோது மணி வைத்தியனை ஒரு பெரிய மலைப் பாம்பு சுற்றி வளைத்து அவனை விழுங்கத் தன் வாயைத் திறந்து கொண்டிருந்தது.

சித்தசாதகன் அதைக் கண்டு ''அடடா! யாரோ ஒருவனை ஒரு மலைப் பாம்பு விழுங்க முயன்று கொண்டிருக்கிறதே. அவனை எப்படியாவது காப்பாற்ற வேண்டும். ஜெயசீலா! நீ உன் வாளை எடு!'' என்றான்.

ஜெயசீலன் சட்டென ஓடி, தன் வாளால் பாம்பின் தலையை நகர்த்தி மணி வைத்தியனுக்குக் காயப்படாத விதத்தில் அதனை வெட்டினான். தலை துண்டிக்கப்பட்டதும் மணி வைத்தியனைச் சுற்றிய அப்பாம்பின் உடல் பகுதி தளர்ந்தது. மணி வைத்தியன் விடுவிக்கப்பட்டான்.

ஜெயசீலன் அவனைப் பிடித்துத் தடவியவாறே ''பயப்படாதே. மலைப் பாம்பு இறந்துவிட்டது. நீயும் ஆபத்திலிருந்து தப்பிவிட்டாய்!'' என்றான்.

மணி வைத்தியன் அவர்கள் இருவரையும் ஆச்சரியத்துடன் பார்த்து, ''நீங்கள் யார்? அந்த முதலை மனிதன் என்ன ஆனான்?'' என்று கேட்டான். ஜெயசீலனும் ''முதலில் நீ யாரென்றும் உனக்கும் முதலை மனிதனுக்கும் என்ன தொடர்பு உள்ளது என்பதையும் சொல்!'' என்று அதிகாரத்துடன் கேட்டான்.

மணியும் ''நான் இங்கே அருகே உள்ள ஒரு கிராமத்தில் வாழும் வைத்தியன். எம் ஊரருகே உள்ள

காட்டிற்குள் ஒரு யானை புகுந்தது. அதன் மீது ஒரு மனிதன் முதலை வடிவில் அமர்ந்திருந்தான். அவன் அங்கே தென்பட்ட ஆடு மாடு மேய்க்கும் ஒரு சிறுவனைப் பிடித்து தனக்கு உணவும் சிகிச்சைக்கு ஒரு வைத்தியனையும் அழைத்து வரு மாறு சொல்ல அனுப்பினான். கிராம மணியகாரர் ஊரார் யாவரையும் அழைத்துக் கொண்டு அந்த முதலை மனிதன் இருக்கும் இடத்திற்குச் சென்றார்,'' என்று கூறி மேலும் தொடர்ந்தான்.

''ஊரார் எல்லோரும் அந்த இடத்தை அடைந்தபோது அந்த முதலை மனிதன் தன் தலைப் பாகையை எடுக்கவே அவன் சாதாரண மனிதனாகத் தென்பட்டான். அவன் 'வைத்தியன் வந்திருக்கிறானா?' என்று கேட்கவே, கிராம மணியகாரர் என்னையும் முத்துவையும காட்டி னார். முதலை வடிவில் வந்த அந்த மனிதன் தன் இடுப்பைக் காட்டி 'ஒரு வாள் ஒடிந்து இங்கு குத்தியுள்ளது. அதை எடுக்க வேண்டும்' என்றான். நானும் 'முத்து அறுவை சிகிச்சை செய்பவன். அவன் அக்கத்தியை எடுக்கட்டும். அதன் பிறகு காயத் திற்குப் பச்சிலையை வைத்துக் கட்டு கிறேன்' எனக் கூறிவிட்டு பச்சிலை யைத் தேடிக் கொண்டு இங்கு வந்தேன். வந்த இடத்தில் அகப் பட்டுக் கொண்டேன். நல்ல வேளை யாக நீங்கள் வந்து என்னைக் காப் பாற்றினீர்கள்!'' என்று கூறினான்.

அப்போது அங்கு வந்த சேர்ந்த முதலை மனிதன் ''இவன் எனது பிரத்தியேக வைத்தியன். உம். நீங்கள் யார்? சட்டெனச் சொல்லப் போகி றீர்களா அல்லது என் யானையின் மோதலை ஏற்கப் போகிறீர்களா?'' என மிரட்டினான்.

ஜெயசீலன் தன் வாளை எடுத்துக் கொண்டு, ''இங்குள்ள கிராம வைத் தியன் உனக்குத் தனிப்பட்ட வைத் தியனா? உண்மையில் நீ யார்?'' என்று அதட்டியவாறே கேட்டான். அப்போது சற்றும் தாமதிக்காமல் சித்தசாதகனும் தன் மந்திரத்தடியை உயர்த்தினான். (தொடரும்)



## இந்திய மாவீரர்கள் புதிர்ப் போட்டியில் கலந்து கொண்டு அற்புதமான பரிசுகளை வெல்லுங்கள்

# இந்திய மாவீரர்கள்-9

இந்திய விளையாட்டுகளில் வீரர்கள் ஏராளமாய் கடந்த காலத்திலும் தற்போதும் இருக்கிறார்கள். அவர்களில் எவ்வளவு பேர்களை இங்கு அறிவீர்கள்?

**முற்றிலும் சரியான விடைகள் கொண்ட மூன்று கூப்பன்களுக்கு சைக்கிள்கள் பரிசளிக்கப்படும்***

1. நான் டெஸ்ட் கிரிக்கெட்டில் 29 சதங்களை அடித்து புகழ்பெற்ற கிரிக்கெட் வீரர் டான்பிராட்மனின் சாதனைக்குச் சமமாக வந்துவிட்டேன். நான் யார்?

---

2. சென்ற ஆண்டு அனைத்து இங்கிலாந்து பாட்மிண்டன் சேம்பியன் பதவியை வென்று பரபரப்பை ஏற்படுத்தினேன். என் பெயரைக் கூறுங்கள்.

---

3. பறக்கும் சீக்கியன் என்று பிரபலமான நான் 1960 ஒலிம்பிக் போட்டியின் 400 மீ ஓட்டப்பந்தயத்தில் முடிவில் வெற்றி பெற்றவன். என் பெயர் என்ன?

---

4. உலக அமெச்சூர் பில்லியர்ட் சேம்பியன் பதவியை முதல் தோற்றத்திலேயே 1985ல் வென்ற, வயதில் மிகக் குறைந்த இளைஞன். என் பெயரைக் கூறுங்கள்.

---

5. எனது 16வது வயதில் ஜூனியர் விம்பிள்டன் பதவியை 1953ல் வென்றவன். என் மகனும் என்னைப் போலப் புகழ்பெற்றவனே. நான் யார்?

---



ஒவ்வொரு வினாவிற்கும் அதன் கீழுள்ள வெற்றிடத்தில் விடையைத் தெளிவாக எழுதவும். இந்த ஐவரில் உங்களுக்கு பிடித்தமான தேசியமாவீரர் யார் என்றும் அதற்கான காரணங்களை பத்து சொற்களில் எழுதவும். எனக்கு மிகவும் பிடித்த தேசிய மாவீரர் ..............................................

..............................................

..............................................

போட்டியாளரின் பெயர்: ..............................

வயது: .................. வகுப்பு: ..............................

முகவரி: ..............................................

..............................................

பின்கோடு: ...................... போன்: ......................

போட்டியாளரின் கையொப்பம்: ..............................

பெற்றோரின் கையொப்பம்: ..............................

இந்தப் பக்கத்தைக் கத்தரித்துக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்

**இந்திய மாவீரர்கள் புதிர்ப்போட்டி-9**
**சந்தமாமா இந்தியா லிமிடெட்**
நெ. 82. டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை-600 097
அனுப்ப வேண்டிய கடைசித் தேதி ஜூலை 5, 2002

நிபந்தனைகள்:

1. இப்போட்டி 8 முதல் 14 வயதிற்குட்பட்ட சிறார்களுக்கு மட்டுமே.
2. *எல்லா மொழிப்பதிப்புகளின் கூப்பன்களிலிருந்தும் மூன்று பேர்கள் தேர்ந்தெடுக்கப்படுவார்கள். இச்சிறார்களுக்கு அவர்களுக்கு ஏற்ற அளவு சைக்கிள்கள் வழங்கப்படும். முற்றிலும் சரியான விடைகள் கொண்ட பல கூப்பன்கள் இருந்தால், 'எனக்கு மிகவும் பிடித்தமான மாவீரர்' என்ற தலைப்பில் எழுதப்பட்ட வாக்கியங்களில் சிறந்தனவாகத் தேர்ந்தெடுக்கப்படுபவைகளுக்குப் பரிசு அளிக்கப்படும்.
3. நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.
4. இப்போட்டி தொடர்பாக எவ்விதக்கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது.
5. வெற்றிபெற்றவர்களுக்குத் தபால் வாயிலாக முடிவுகள் தெரிவிக்கப்படும்.



நவீன வேதாளக் கதை

# அவர் யோகியா?

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான்.

பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படிப் பிடிவாதமாக ஒரு செயலில் ஈடுபட்டிருக்கிறாயே! யாருக்காக இதனை மிகவும் சிரமப்பட்டு செய்கிறாய்? முடிவில் நீ ஏமாந்து



போனாலும் போய்விடுவாய். உனக்கு சிரமம் தெரியாது இருக்க ஒரு யோகியின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்,'' என்று கூறிக் கதை சொல்லலாயிற்று.

ராஜகிரி என்ற ஊரின் எல்லையில் ஒரு பெரிய அரச மரம் இருந்தது. அதன் கீழ் தாடியும் மீசையும் கொண்டு ஒருவர் கண்ணை மூடிக் கொண்டு அமர்ந்திருந்தார்.

அவரிடம் யார் எதைக் கேட்டாலும் எதுவும் கேளாதவர் போல பதிலே கூறாமல் இருந்தார். அதனால் மக்கள் முதலில் அவரை ஒரு பைத்தியம் எனக் கூறினார்கள். பிறகு செவிடர் என்றும் ஊமை என்றும் சொன்னார்கள்.

அவர் அதை எல்லாம் அலட்சியப்படுத்தியதால் அவர் உண்மையிலேயே மகாஞானி எனக் கூறி மரியாதை செய்யலானானர்கள்.

அவரும் விருப்பு வெறுப்பு இல்லாது மக்கள் கொடுத்த பழங்களை மட்டும் ஏற்றுப் புசித்து வந்தார் ஒருநாள் ஒரு முரட்டுக் காளை அ ஊரின் தெருக்களில் திரிந்து எல்லோரையும் முட்ட முயன்றது.

அதனால் அதனை அடக்க எல்லோரும் அதனைத் துரத்திக் கொண்டு செல்லவே, அது ஊர் எல்லைக்குப் போனதும் அரச மரத்தின் கீழ் அமர்ந்திருந்த மகாஞானியைக் கண்டு அவர் முன் அடக்கமாய்ப் படுத்துவிட்டது. இதைப் பார்த்தவர்கள், ''ஆகா! மகாஞானி தான் எவ்வளவு சக்தி வாய்ந்தவர்! முரட்டுக் காளையையே பணிய வைத்தாரே!'' எனப் புகழ்ந்தார்கள்.

அன்று முதல் அந்த மகாஞானியை தரிசிக்க மக்கள் கூட்டம் கூட்டமாக வந்தார்கள். அவரை யோகீஸ்வரர் எனப் புகழ்ந்து காணிக்கைகள் சமர்ப்பித்தார்கள். அவரும் தமக்குக் கிடைத்ததை எல்லாம் மற்ற அனைவருக்கும் கொடுத்துக் கொண்டே வந்தார். தனக்கென எதையும் அவர் வைத்துக் கொள்ளவில்லை. அதனால் அவரை மாபெரும் தியாகி என்றும் பாராட்டினார்கள்.

பலர் தம் பிரச்சினைகளைக் கூறி அவற்றிற்குத் தாமே எடுத்த முடிவுகள் சரி தானா என்று கேட்க, அந்த யோகீஸ்வரர் எதுவும் கூறாமல் மௌனமாக இருப்பது கண்டு ''இவரது மௌனம் சரி என்பதற்கு அறிகுறி'' எனக் கூறி மகிழ்ந்து திருப்தி

அடைந்தார்கள்.

சில சமயங்களில் அவர் தலை அசைப்பதையும், கைகளை ஆட்டு வதையும் கண்டு தமக்கு அவரது அனுக்கிரகம் கிடைத்துவிட்டதாக எண்ணி பூரித்துப் போனார்கள். இதனால் அந்த யோகீஸ்வரரின் புகழ் நாடு முழுவதிலும் பரவியது.

யோகீஸ்வரரை தரிசிக்க தினமும் ஆயிரக் கணக்கில் மக்கள் வரவே, கூட்டத்தைக் கட்டுப்படுத்தும் பணியை நாலைந்து பேர்கள் சேர்ந்து மேற்கொண்டார்கள். யோகீஸ்வரர் அமர்ந்திருந்த இடத்தைச் சுற்றி வேலி போட்டு ஒரு நுழை கதவு வைத் தார்கள். அவரைத் தரிசிக்க வந் தவர்களை வரிசையில் போகச் சொல்லி, தரிசனத்திற்காகக் கட் டணமும் வசூலித்தார்கள்.

பிறகு ஓர் ஆசிரமம் அங்கே கட் டப் போவதாகக் கூறி கட்டட நிதி என்றும் அவர்கள் வசூலிக்கலானார் கள். இதெல்லாம் யோகீஸ்வரரின் அனுமதி இல்லாமல் நடைபெற்றது. வசூலான தொகையை அந்த நாலைந்து பேர்களே தமக்குள் பங் கிட்டுக் கொண்டார்கள். யோகீஸ் வரருக்கு உணவு என இரண்டு வரட்டு ரொட்டிகளை மட்டுமே கொடுத்து வந்தார்கள். யோகீஸ்வரரோ கண்ணை மூடிக் கொண்டு எதுவும் பேசாமல் அவர்கள் கொடுத்ததைச் சாப்பிட்டு வந்தார்.

அந்த யோகீஸ்வரரைப் பற்றிக் கேள்விப்பட்ட அந்நாட்டு மன்னன் மாறுவேடத்தில் அவரைக் காணச்



சென்றான். பக்தர்கள் எல்லோரும் சென்றபின் இரவில் அவன் யோகீஸ் வரரைக் கண்டான். யோகியின் முன் இரண்டு ரொட்டிகள் இருந்தன. அவரது கண்களில் கண்ணீர் ததும் பியது. அவரது கடந்தகால வாழ்க் கையில் ஏதோ ரகசியம் இருக்க வேண்டும் என அவன் நினைத்தான்.

அவன் யோகீஸ்வரரைப் பார்த்து, ''சுவாமி! உங்கள் சக்தி மகத்தானது என்று எல்லோரும் கூறுகிறார்கள். நீங்கள் யார் என்ன சொல்கிறார்கள் என்பதைக் கேட்பதுமில்லை. வாய் திறந்து பேசுவதும் இல்லை. ஏதோ நீங்கள் சைகை செய்ய, அதை மக்கள் தமக்கு அனுகூலமாக எடுத்துக் கொள் கிறார்கள். இது நாட்டு மக்களைத் தவறான பாதையில் கொண்டு சென்று விடும். இனி நீங்கள் பேச வேண்டிய



நேரம் வந்துவிட்டது. எனவே நீங்கள் உங்கள் இந்த செய்கைகளுக்கான விளக்கத்தைத் தர வேண்டும். நான் இந்த நாட்டின் மன்னன், இப்போது மாறு வேடத்தில் வந்திருக்கிறேன்,'' என்றான்.

யோகீஸ்வரரும், ''ஆம். நான் என் மௌனத்தைக் கைவிட்டு பேச வேண்டிய நேரம் வந்துவிட்டது. உண்மை என்றாவது வெளிப்பட்டுத் தானே தீரும். நாம் பார்ப்பது, கேட்பது, பேசுவது யாவுமே உண்மையாக இருப்பதில்லை.

பொய் உண்மையை நீண்ட காலத்திற்கு மறைத்து வைத்துவிடுகிறது. எனவே தான் நான் எதையும் பாராமலும், பேசாமலும் கேட்டுக் கொள்ளாமலும் இருந்தேன்.

மேலும் இதற்கான வலுவான காரணத்தைக் கூறுகிறேன். என் மனைவியுடன் பிறந்தவன் அவளது தம்பி ஒருவனே. அவன் மீது அவள் அளவற்ற பாசம் கொண்டிருந்தாள். அவன் செய்து வந்த வியாபாரத்தில் பெருத்த நஷ்டம் ஏற்படவே, அதைச் சரிக்கட்ட பணம் கொடுக்குமாறு என் மனைவி என்னிடம் கெஞ்சினாள்,'' என்று கூறி மேலும் தொடர்ந்தார்.

''நானும் என் ஐந்து ஏக்கர் நிலத்தில் மூன்று ஏக்கரின் பேரில் ஒரு வட்டிக் கடைக்காரரிடமிருந்து கடன் வாங்கிக் கொடுத்தேன். அவனும் நஷ்டத்தைச் சரிப்படுத்தி மீண்டும் வியாபாரம் செய்தான். லாபம் கிடைத்தது. ஆனால் நான் கடனாக வாங்கிக் கொடுத்த பணத்தை எனக்குக் கொடுக்காமல் தலைமறைவாகி விட்டான்.

எனக்குக் கடன் கொடுத் தவர் இன்னும் ஒரு வாரத்திற்குள் கடனைத் தீர்க்காவிட்டால் என் வீட்டையும் நிலத்தையும் ஏலத்திற்குக் கொண்டு வரப் போவதாகக் கூறிவிட்டார். நான் இதை என் மனைவியிடம் கூறி, அவளையும் அவளது தம்பியையும் அவளது குடும்பத்தாரையும் திட்டினேன். அதைப் பொறுக்க முடியாமல் அவள் அப்போதே வீட்டின் கொல்லைப் புறத்திற்கு ஓடி அங்கிருந்த கிணற்றில் குதித்துத் தற்கொலை செய்து கொண்டாள்.

அவளது தம்பி தான் பணத்துடன் வந்து கடனாக என்னிடமிருந்து வாங்கிய தொகையைக் கொடுக்க ஒரு வாரத்திற்குள் வருவதாக எழுதிய

கடிதம் அதே நாளில் வந்தது. நான் அப்போதே என் வீட்டை விட்டுக் கிளம்பி ஊர் ஊராகத் திரிந்து முடிவில் இந்த மரத்தடியில் வந்து உட்கார்ந்து விட்டேன்.

அப்போது முதல் யார் என்ன சொன்னாலும் கேட்காமல் கண்ணை மூடிக் கொண்டு பேசாமல் இருந்து வருகிறேன். எனக்கு அபூர்வ சக்தி எதுவும் கிடையாது. ஆனால் சிலர் என்னை வைத்துப் பணம் சம்பாதிக் கிறார்கள். இதை எப்படித் தடுப்பது என்று தான் தெரியவில்லை.''

மறுநாள் யோகீஸ்வரரை தரிசிக்க வந்த மக்கள் அவர் அங்கே இல்லாது கண்டு திகைத்தனர். அதன் பிறகு அவர் எங்குமே தென்படவில்லை. ஆனால் தனது அந்தரங்க ஆலோ சகராகப் புதிதாக நியமிக்கப்பட்டவர் அந்த யோகீஸ்வரர் என்பதை மன் னன் மட்டுமே அறிவான்.

வேதாளம் இக்கதையைக் கூறி, ''யோகீஸ்வரராக நீண்ட காலம் இருந்தவர் ஏன் மன்னனின் ஊழி யராக வேலையில் சேர்ந்தார்? அவரை மக்கள் மதித்துப் போற்றிப் புகழ்ந்து வந்தார்களே. அவர் மிகவும் சக்தி வாய்ந்தவர் என்று எண்ணி அவருக் குக் காய், கனி, கிழங்குகளோடு பணத்தையும் பலவிதப் பொருள் களையும் காணிக்கையாகச் செலுத்தி னார்களே. அவரிடம் அனுமதி கேட்டு அவரது அங்க அசைவுகளைக் கொண்டு அவர் அனுமதித்துவிட்டார் என எண்ணினார்களே. இவ்வளவு சக்தி வாய்ந்த யோகி இவற்றை எல்லாம் ஏன் மதிக்கவில்லை? இதற்குத் தக்க பதில் தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித் துச் சுக்குநூறாகிவிடும்,'' என்றது.



அதற்கு விக்கிரமனும், "யோகீஸ்வரரின் புகழை மற்றவர்கள் பரப்பினார்களேயொழிய அவர் தம்மை யோகீஸ்வரர் என்று கூறிக் கொள்ளவில்லை. அவர் தம் வீட்டிலிருந்து மனம் உடைந்து போய்த் தான் கிளம்பினார். எங்கும் தங்காமல் ஊர்ஊராக அலைந்து திரிந்தார்.

அவ்வாறு திரிந்தும் மன நிம்மதி கிடைக்காததால் ராஜகிரியை அடைந்ததும் எங்கும் அலையாமல் ஊர் எல்லையில் ஒதுக்குப்புறமாக மரத்தின் கீழே உட்கார்ந்துவிட்டார்.

தாடியும் மீசையுமாய் ஒட்டிய கன்னத்தோடு மெலிந்த உடலுடன் இருந்த அவரைப் பார்த்தவர்கள் முதலில் அவரை ஒரு பைத்தியக்காரன் என்றே எண்ணினார்கள்.

வாய் திறந்து அவர் பேசாததால் அவரை ஊமை என்றும் எதையும் பாராமலும் கேட்டுக் கொள்ளாமலும் இருந்ததால் செவிடர் என்றும் எண்ணினார்கள்.

ஆனால் நாளாக ஆக அவரது மௌனத்தையும் பொறுமையையும் கண்டு அவரை சக்தி வாய்ந்த யோகி எனக் கூறி அவரிடம் தம் மனக் குறைகளைக்கூறி அதனைப் போக்கத் தமக்குத் தெரிந்த வழியைக் கூறி அது சரியா எனக் கேட்டார்கள்.

அவர் தலையையோ, கையையோ அசைத் தாலே தாம் கூறுவதை அவர் சரி என அங்கீகரிப்பதாக எண்ணிக் கொண் டார்கள். இதனால் அவரது புகழ் மற்றவர்களால் தான் பரப்பப் பட்டது. அவர் தன்னை சக்தி வாய்ந்தவர் என்றோ அல்லது யோகி என்றோ சொல்லிக் கொண்டதே இல்லை.

குடும்பத் துயர் காரணமாக மனம் ஒடிந்து உட்கார்ந்த அவர் தன்னைச் சிலர் பயன்படுத்திப் பணம் சம்பாதிப்பதை வருத்தத்தோடு மன்னனிடம் கூறினார். மன்னனும் அவரது மனத்தை அறிந்து அவர் வாழ வழி செய்தான்," என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு உயரக் கிளம்பிப் போய் வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



இந்தியப் புராதனக் கதைகள் - 2

# தேவர்களையும் மானிடர்களையும் காத்த மகரிஷி



விருத்திராசுரன் என்ற ராட்சஸன் மூவுலகங்களின் மன்னனாகிவிட ஆசை கொண்டான். தேவலோக அதிபதியான இந்திரன் நீண்ட காலம் அவனுடன் போர் புரிந்து அவனைக் கொன்றுவிட்ட போதிலும் அமைதி நிலவவில்லை.

ஏனெனில் விருத்திராசுரனின் ஆதரவாளர்களான காலகேயர்கள் தேவர்களையும் மனிதர்களையும் துன்புறுத்தி வந்தார்கள். இவர்கள் விருத்திராசுரன் இறந்ததும் மாயமாய் மறைந்து போய் ஓரிடத்தில் ஒளிந்து கொண்டார்கள். அந்த இடம் எது என்று யாருக்கும் தெரியவில்லை.

அவர்கள் எங்கோ மலைகளிலோ அல்லது காடுகளிலோ தான் ஒளிந்து கொண்டிருக்க வேண்டும் என்று யாவரும் எண்ணினார்கள். இனி அவர்கள் வந்து யாரையும் துன்புறுத்த மாட்டார்கள் என்று யாவரும் எண்ணி விட்டார்கள். ஆனால் நிலைமை அப்படி இருக்கவில்லை. இரவு வேளைகளில் அவர்கள் திடீர்திடீரென வந்து கிராமங்களைத் தாக்கி மக்களைத் துன்புறுத்தினார்கள். சாது, சன்னியாசிகளை அடித்து வருத்தினார்கள். இவ்வாறு தேவர்களையும் துன்புறுத்தி அவர்கள் மகிழ்ந்தார்கள்.

மன்னர்கள் பலரும் அவர்களை அடக்க முயன்றார்கள். ஆனால் காலகேயர்கள் திடீர் தாக்குதல்கள் நடத்தி விட்டு தம் மறைவிடத்திற்குப் போய் விடுவதால் அவர்கள் இருக்கும்

- பாரதியன் -



இடத்தைக் கண்டுபிடித்துத் தாக்க யாராலும் முடியவில்லை. அவர்களோ மக்களைக் கொன்று, இரத்த வெள்ளம் பெருகுவது கண்டு கூத்தாடிக் கூச்சல் போட்டு குதூகலித்தார்கள். இரவு வேளைகளில் இத்தகைய தாக்குதல்களை நடத்திவிட்டு ஓடி விடுவதால் அவர்களைப் பின் தொடர்ந்து செல்ல மன்னர்களின் வீரர்களால் முடியாது போயிற்று. அவர்கள் எல்லோரும் அப்படி மாயமாகி எங்கு போய்விடுகிறார்கள். என்பது புரியாத புதிராக இருந்தது.

முடிவில் காலகேயர்கள் கடலின் அடியில் தான் ஒளிந்து கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிந்து போயிற்று. அவர்கள் மக்களைத் திடீரெனத் தாக்கிவிட்டு கடலின் அடிப் பகுதிக்குப் போய் மறைந்து கொண்டதால் யார் கண்களுக்கும் தென்படாது போயினர். கடலின் அடியில் அவர்களது உறைவிடம் இருப்பது தெரிந்து விட்ட போதிலும் அங்கு எப்படிப் போய் அவர்களைத் தாக்குவது என்பது பிரச்சினையாக இருந்தது.

இதனை அகத்திய மாமுனிவரால் தான் செய்து முடிக்க முடியும் என்று தேவர்களுக்கு எடுத்துக் கூறப்பட்டது. அகத்தியரைப் பற்றித் தான் யாவரும் அறிவார்களே! அவர் இமயத்திலிருந்து கிளம்பி விந்திய மலையைக் கடந்து தென் பாரதத்திற்குப் போய்ச் சேர்ந்தவர். இவ்வாறு இவர் தென்னிந்தியாவிலேயே இருந்துவிடக் காரணம் என்ன என்று ஒரு கதை விவரமாகக் கூறுகிறது. ஒருமுறை சூரியனுக்கும் விந்திய மலைக்குமிடையே யார் அதிக சக்தி வாய்ந்தவர் என்ற சச்சரவு ஏற்பட்டதாம். அதில் விந்திய மலை உயர்ந்து கொண்டே போய் சூரியன் போகும் வழியை மறித்தது. இதனால் உலகிற்குக் கெடுதல் எனக் கூறி தேவர்கள் அவ்வாறு சூரியனைத் தடுக்காமல் வழி விடும்படி விந்திய மலையிடம் சொல்லிப் பார்த்தார்கள். ஆனால் அது கேட்கவில்லை.

விந்திய மலை அகத்திய முனிவரின் சீடன். அதனால் தேவர்கள் அகத்தியரிடம் சென்று, ''முனி சிரேஷ்டரே! தங்களது சீடன் விந்தியன் செய்யும் அக்கிரமத்தைப் பாருங்கள்! சூரியனை அவன் பாதையில் தடுத்துவிட்டான். அதனால் மழையும் வெளிச்சமும் பூவுலகிற்கு இல்லாமல் போய்விட்டது. அத

னால் பயிர்கள் விளையவில்லை. மக்களுக்கு உணவு கிடைக்கவில்லை. தண்ணீர் இல்லாததால் எதையும் சுத்தமாக வைத்திருக்க முடிய வில்லை. நீங்கள் விந்திய மலைக்கு அறிவுரை கூறி சூரியனுக்கு வழிவிடச் செய்யுங்கள் என்று வேண்டினார்கள்.

அகத்தியரும் விந்திய மலைக்குச் செல்லவே, அது தன் குருவைக் குனிந்து வணங்கியது அகத்தியரும் அதனிடம், ''நான் வரும்வரை இப் படியே இரு'' என்று கூறி அவர் தென் பாரதத்திற்குச் சென்றார்.

அதன் பிறகு அவர் தெற்கிலேயே தங்கிவிட்டார். வடக்கே செல்ல வில்லை. விந்திய மலை குனிந்து விட்டதால் சூரியன் தங்குதடை இல்லாமல் போய்வர வழி ஏற்பட்டு விட்டது.

இவ்வளவு சக்திவாய்ந்த அகத் தியரிடம் தான் காலகேயர்களை ஒழிக்க உதவியை நாடி தேவர்கள் சென்றார்கள். அகத்தியரும் அவர் களுக்கு உதவுவதாகக் கூறி, கடலின் கரைக்குப் போய் நின்று கடல் நீரை கையில் எடுத்து உறிஞ்சி அது முற்றிலும் வற்றிப் போகும்படிச் செய்தார். அப்போது காலகேயர்கள் மறைந்து இருக்கும் இடம் தேவர் களுக்கும் மன்னர்களுக்கும் தெரிந்து, அவர்களோடு தேவர்கள் போர் புரிந்து அவர்களை அடியோடு அழித்து விட்டார்கள்.

இந்தியப் புராணக் கதைகளில் உள் அர்த்தங்கள் அடங்கி உள்ளதைப் பண்டிதர்கள் பாமரர்களுக்கு விளங் கும்படி அவ்வப்போது கூறி வரு கிறார்கள். கதைகளை மேலெழுந்த வாரியாகப் படித்தால் நம்பத்தகாத சம்பவங்கள் இருப்பதாகத் தெரியும். ஆனால் அவற்றில் கூறப்பட்டனவை பற்றி ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்தால் அதன் உட்பொருள் விளங்கும்.

தீயசக்திகளை ஒழித்து நல்ல சக்திகள் தழைத்து ஓங்க எவ்வளவு சிரமப்பட வேண்டி வருகிறது என்பது இக்கதைகளால் தெரிய வருகிறது. எனவே இம்மாதிரிக் கதைகளைப் படித்து நன்கு சிந்தித்து உட்கருத்தைப் புரிந்து கொள்ள முயல வேண்டும்.



# நம் இந்தியா

## புதிர் வினாக்கள்

**பள்ளிகளில் நீங்கள் இந்திய வரலாற்றையும் புவியியலையும் படித்திருப்பீர்கள். அவற்றை நினைவில் கொண்டிருப்பீர்கள் என்றே நினைக்கிறோம். இம்மாதப் புதிர் வினாக்கள் அவற்றிலிருந்து கேட்கப்படுபவை. யோசித்து விடை காணுங்கள்.**

1. இந்திய வடகிழக்குப் பகுதியின் பெயர் ''பாம்புகளின் உறைவிடம்'' என்ற பொருளில் அமைந்துள்ளது. அந்தப் பெயர் என்ன?
2. ஸ்ரீரங்கப்பட்டணம் என்ற தீவு எந்த ஆற்றின் நடுவே உள்ளது?
3. ஒரிஸ்ஸாவின் பல்மேரா முனை எந்த ஆற்றின் கடை முகத்தில் உள்ளது?
4. எந்த மாநிலத்தில் உள்நாட்டு நீர்வழி மிக நீளமானது?
5. ஸ்பிடி பள்ளத்தாக்கிலுள்ள எந்த கிராமம் உலகிலேயே மிக உயரத்தில் உள்ளதாகக் கருதப்படுகிறது? அது எவ்வளவு உயரத்தில் உள்ளது?
6. பம்பா, பெரியாறு, மரிமலை ஆகிய ஆறுகள் எந்த ஏரியில் தம் நீரை நிரப்புகின்றன?
7. மேற்குத் தொடர்மலையில் மகாராஷ்டிர மாநிலத்தின் உயரமான கோடைவாசத்தலம் எது?
8. ஜோக் நீர் வீழ்ச்சி மிக உயரமானது. அது எந்த நதியில் உள்ளது?
9. பூண்டிக் கோட்டைக்குள் ஒரு செயற்கை ஏரி உள்ளது. இதில் பாதி மூழ்கியுள்ள வருணன் கோயில் உள்ளது. அந்த ஏரியின் பெயர் என்ன?
10. விந்திய மலை மத்தியப் பிரதேசத்தின் ரஜபுத்திர வம்சம் ஒன்றிற்கு தன் பெயரைக் கொடுத்துள்ளது. அந்தப் பெயர் என்ன?

*(விடைகள் அடுத்த மாத இதழில்)*

### மே மாத வினாக்களின் விடைகள்

1. பாஹமனி, சுல்தான் அல்லாவுத்தீன், கி.பி.1347.
2. அந்தமான், நிக்கோபார் தீவுகளுக்கு இடையில் உள்ள டென் டிகிரி கால்வாய்.
3. கட்டக்.
4. பம்பாய் (தற்போது மும்பை).
5. டில்லி.
6. கல்கத்தா (தற்போது கோல்கத்தா).
7. மதுரை - வைகை நதி.
8. பாம்பன் ஜலசந்தி.



# நிறைவேறாத காரணம்!

காளிமுத்து இருந்த கிராமம் காட்டுப்பகுதியில் இருந்தது. அங்கிருந்து சற்றுத் தொலைவிலுள்ள ஒரு நகரத்தில் அவன் தேங்காய் வியாபாரம் செய்யப் போய்விட்டு வருவது வழக்கம்.

ஒருநாள் நகரிலுள்ள தன் கடையை மூடிவிட்டு வர சற்று நேரமாகிவிட்டது. நகரிலிருந்து அவன் தன் ஊருக்குக் காட்டு வழியே சென்று கொண்டிருந்தான்.

அப்போது பெருத்த மழை பெய்யவே, அவன் தன் எதிரில் தென்பட்ட ஒரு பாழடைந்த கோயிலின் மண்டபத்துள் போய் நின்றான்.

சற்று நேரத்தில் மழை பெய்வது கொஞ்சம் குறையவே, அவன் அங்கிருந்து கிளம்பி காட்டு வழியே தன் ஊரை நோக்கிப் போகலானான். எங்கும் ஒரே இருட்டு. ஆனால் ஓரிடத்திலிருந்து 'பளிச்', 'பளிச்' சென்று வெளிச்சம் வருவதைக் கண்டு அவன் அந்த இடத்திற்குப் போனான். அங்கு ஒரு பாறை மீது ஒரு கிழப் பிசாசு கையில் ஒரு தீவட்டியை வைத்துக் கொண்டு நிற்பதைக் கண்டான். அதைக் கண்டு காளிமுத்து பயந்து போனான்.

கிழப் பிசாசோ அவனைப் பார்த்து, ''பயப்படாதே! மழையிலிருந்து தப்பி எங்கோ ஒதுங்கி நின்றுவிட்டு இப்போது நீ உன் ஊருக்குப் போய்க் கொண்டிருக்கிறாயா?'' என்று பரிவுடன் கேட்டது.

பிசாசு பேசியவிதம் கண்டு காளிமுத்துவுக்கு சிறிதுகூட பயம் இல்லாது போயிற்று. அவன் அதனிடம், ''ஆமாம். சற்று நேரம் வரை மழை விடாமல் பெய்ததே. அதில் உன் தீவட்டி அணையாமல் போனது

- அருணா கிருஷ்ணன் -



அதிசயம் தான்,'' என்றான்.

அந்தப் பிசாசும் ''நான் என் இளமைப் பருவத்தில் சுயநலம் கொண்டே செயல்பட்டேன். வயதான பிறகு தான் பிறருக்கு உதவ வேண்டும் என்ற எண்ணம் என் மனதில் தோன்றியது. இப்போதெல்லாம் நான் பிறருக்கு உதவி புரிந்து வருகிறேன்,'' என்றது.

அப்போது காளிமுத்து ''நீ காட்டில் இருந்து கொண்டு யாருக்கு என்ன உதவி செய்துவிட முடியும்? எனக்கு உன்னால் உதவ முடியுமா? `என் வீட்டில் பொற்காசுகளை மழை போலக் கொட்டுவாயா?'' என்று பாதி கேலியாகவும் பாதி நம்பிக்கையுடனும் கேட்டான்.

பிசாசும் சற்று யோசித்து ''சுயநலத்துடன் கேட்கும் எதையும் நான் நிறைவேற்றமாட்டேன். எனவே இப்போது நீ கோரியதைச் செய்து உனக்கு உதவ முடியாது,'' என்றது.

அப்போது காளிமுத்து ''ஓஹோ! அப்படியானால் நான் என் அடுத்த வீட்டிலுள்ள பரம தரித்திரனான பாலய்யனுக்கு ஒரு குடம் நிறையத் தங்கக் காசு கிடைக்கச் செய்யுமாறு கேட்கிறேன். அதைச் செய்ய முடியுமா?'' என்று கேலியாகக் கேட்டான்.

கிழப் பிசாசும் ''இப்படி நீ கேட்டதில் சுயநலம் இல்லாததால் உன் கோரிக்கை நிறைவேறும். அது அவன் வீட்டுத் தென்னை மரத்தடியே உள்ளது,'' எனக் கூறி அனுப்பியது.

ஊர் சேர்ந்த காளிமுத்து தன் அண்டை வீட்டுக்காரனான பாலய்யனைக் கூப்பிட்டு, ''நான் இன்று காட்டு வழியே வந்து கொண்டிருந்த போது ஒரு பிசாசைக் கண்டேன். அது நான் சுயநலம் கருதாமல் எதை விரும்பினாலும் அதை நிறைவேற்றுவதாகக் கூறியது. எனவே உனக்குப் புதையல் கிடைக்கும்படிச் செய்ய அதனிடம் கூறினேன். அதுவும் உனக்குப் புதையல் உன் வீட்டுத் தென்னை மரத்தின் கீழ் கிடைக்கும் என்று கூறியது. எனவே நீ உடனே சென்று உன் வீட்டுத் தென்னை மரத்தின் கீழே தோண்டிப் பார்!'' என்றான்.

பாலய்யாவும் தன் வீட்டுத் தென்னை மரத்தின் கீழ் தோண்டினான். அவனுக்கு பொற்காசுகள்

நிறைந்த குடம் கிடைத்தது.

அப்போது காளிமுத்து ''பாலய்யா! உனக்குப் புதையல் கிடைக்கச் செய்தேன். இதில் என சுயநலம் இல்லாததால் தான் உனக்குப் புதையல் கிடைத்தது. இதுபோல நீயும் அந்தப் பிசாசிடம் எனக்கு நிறையப் பணம் கிடைக்க வேண்டும் என்று கேள். அதில் உன் சுயநலம் இல்லாததால் எனக்குப் பணம் கிடைத்து விடும். எனவே நீ காட்டிற்குப் போய் அந்தக் கிழப் பிசாசிடம் எனக்கும் பெரிய புதையல் கொடுக்கச் சொல் லிக் கேள். இதுதான் நீ எனக்குக் காட்டும் நன்றி'' என்றான்.

பாலய்யாவும் காட்டிற்குப் போய் விட்டு வந்து, ''உன் வீட்டு சமையலறையின் சுவர்களை இடித்துப் பார்த்தால் உனக்கு பெரும் புதையல் கிடைக்கும் என்று கிழப் பிசாசு கூறியது,'' என்று தெரிவித்தான்.

காளி முத்துவும் தன் வீட்டுச் சமையலறையின் சுவர்களை இடித்து விட்டு புதையலைத் தேடினான். ஆனால் புதையல் கிடைக்கவில்லை. சுவர் களை இடித்ததால் ஏற்பட்ட அதிர்ச்சி யில் வீடே நிலைகுலைந்து சாய்ந்து விழுந்தது.

அதைக் கண்டு ஆத்திரம் கொண்டு அவன் காட்டிற்கு ஓடிப் போய் கிழப் பிசாசைத் தேடினான். ஆனால் அது தென்படவில்லை. அது இருந்த இடத்தில் ஒரு சாது இருந்தார்.

அவர் காளிமுத்துவைக் கண்டதும் ''நீ கிழப் பிசாசையா தேடுகிறாய்? நான் அதனை இங்கே இருந்து அனுப்பி விட்டேன். நீ அதனிடம் புதையல் வேண்டுமென உன் பக்கத்து வீட்டு பாலய்யன் வாயிலாகக் கேட் டவன் தானே. அந்த கோரிக்கையில் உன் பக்கத்துவீட்டுக்காரனின் நலத் தோடு உன்னுடைய சுயநலமும் வெளிப்பட்டது. அதனால் உனக்குப் புதையல் கிடைக்க வில்லை. நீ சுயநலம் கருதாமல் பாலய்யனுக்குப் புதையல் கிடைக்க வேண்டும் எனக் கேட்டாய். அதனால் அது அவனுக் குக் கிடைத்தது,'' என்றார்.

அதைக் கேட்ட காளிமுத்து வாயடைத்துப் போனான்.





மோனிபாபு கிருஷ்ண நகரில் ஒரு பெரிய பணக்காரன். அவன் மகா கஞ்சன். அவன் தன் தலைக்கு எண்ணெய் தடவிக் கொண்டு சீவிக் கொண்டதே இல்லை. பரட்டைத் தலையாய் அழுக்கு வேஷ்டியுடன் எப்போதும் இருக்கும் அவனை அணுகி பேசக் கூட எல்லோரும் அருவருப்பு அடைந்தனர்.

பண்டிகை நாளில் சிறுவர்களின் கூட்டம் ஒன்று அவனை அணுகி வாண வேடிக்கைகளுக்காக நன்கொடை கேட்டது. மோனியோ, ''காசைக் கரியாக்க நான் பணம் கொடுக்கமாட்டேன்,'' என்று கூறி அச்சிறுவர்களை விரட்டி விட்டான்.





அச்சிறுவர்கள் வழியில் கோபால் பந்துவைக் கண்டு மோனிபாபு நன்கொடை கொடுக்க மறுத்ததைக் கூறினார்கள். மற்றவர்கள் நூறு ஐம்பது என நன்கொடைகள் கொடுத்ததை அவர்கள் கோபாலிடம் கூறினார்கள்.

கோபாலும் ''மோனி கஞ்சன் தான். அவனிடமிருந்து நான் நூறு ரூபாயை நன்கொடையாக வாங்கிக் கொடுக்கிறேன். இன்று மாலை ஐந்து மணிக்கு நீங்கள் எல்லோரும் அவன் வீட்டிற்கு வாருங்கள்,'' என்று கூறி அவர்களை அனுப்பினார்.





கோபால் மோனியைக் காணச் சென்றபோது அவன் தோட்டத்தில் காய்கறிகளைப் பறித்துக் கொண்டிருந்தான். கோபாலிடம் ''இன்று விரதம், இவை நாளைக்குத்தான் பயன்படும்,'' என்றான். கோபாலோ ''நீ கஞ்சத்தனத்தால் பணத்தை வீணாக்குகிறாய்?'' என்றான்.



மோனியும் ''இல்லையே. நான் எதையும் வீணாக்கமாட்டேன்'' எனவே, கோபால் ''நீ இரவில் விருந்தாளியுடன் சாப்பிடும்போது விளக்கை மட்டும் அணைக்கிறாயே. கட்டிய வேட்டி சட்டையை அவிழ்த்துவிட்டு உட்கார். வேட்டி சட்டை கிழியாது பல நாட்களுக்கு வருமே! இது தெரியாதா?'' என்றார்.



கோபால் அவனிடம், ''இதுபோல் உன் மூக்குக் கண்ணாடியில் இரண்டு கண்ணாடிகள் எதற்கு? ஒன்றைத் தூக்கி எறி. அப்போது மற்றொரு கண்ணால் பார்க்கலாம். ஒரு கண்ணாடியின் விலை மிச்சமாகும்,'' என்று கோபால் கேலி செய்தது அவனுக்குப் புரிந்தது.



மோனி அவனிடம் ''நான் கஞ்சத்தனம் செய்வது தவறே. இப்போது என்ன செய்ய வேண்டும்?'' என்று கேட்க அவனும், ''இங்கு வந்திருக்கும் சிறுவர்களுக்கு நன்கொடையாகக் கொடு'' என்றான். மோனியும் சிறுவர்களுக்கு நூறு ரூபாய் கொடுக்கவே, அவர்கள் அதை வாங்கிக் கொண்டு மகிழ்ச்சியுடன் சென்றார்கள்.



# இந்தியாவின் இன்முகம்

## கொண்டபள்ளி பொம்மைகள்



நீங்கள் எப்போதாவது திருப்பதிக்குச் சென்றால் அங்குள்ள நேர்த்தியான வேலைப்பாடுடன் கூடிய மரப்பொம்மைகளை வாங்க மறக்காதீர்கள்.

ஆந்திரப் பிரதேசத்தில் கொண்டபள்ளி, திருச்சானூர், நிர்மல், ஏடிகியோபாக்கம் ஆகிய நான்கு இடங்களில் மட்டுமே இப்பொம்மைகளை உருவாக்குபவர்கள் உள்ளனர். இதில் கொண்டபள்ளி பொம்மைகள் மிகவும் பெயர் பெற்றவை. மிருதுவான வெள்ளை பொன்னிக்கி மரத்தால் இவை செய்யப்படுகின்றன. இவ்வகை மரங்கள் இந்த ஊரைச் சுற்றி ஏராளமாக உள்ளன.

இந்த கொண்டபள்ளி பொம்மைக் கலைஞர்கள் ஆரிய க்ஷத்திரியர்கள் என்ற இனப் பிரிவினர் ஆவர். இவர்கள் நெடுங்காலமாக பொம்மைகள் செய்யும் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். இவர்கள் உருவாக்கும் பொம்மைகள் புராணங்களில் கூறப்படுபவர்களாயும், அந்நிகழ்ச்சிகளை காட்டுவதாயும் அமைகின்றன.

நெசவாளிகள், விவசாயிகள், வியாபாரிகள், பாம்பாட்டிகள், சலவைத் தொழிலாளிகள் எனப் பலவித பொம்மைகள் இவர்களால் உருவாக்கப்படுகின்றன. மயில், கிளி, கொக்கு போன்ற பறவைகளின் பொம்மைகளும், ஒட்டகம், குதிரை, புலி, சிங்கம், யானை, பன்றி போன்ற மிருகங்களின் பொம்மைகளும் இம்மஞ்சள்நிற பொன்னிக்கி மரத்தால் செய்யப்படுகின்றன. முன்காலத்தில் இவற்றிற்கு வண்ணம் கொடுக்க பச்சிலை, மூலிகை, வேர்களைப் பிழிந்து சாறெடுத்து பசையுடன் சேர்த்துப் பயன்படுத்தினர். தற்போது ரசாயன வண்ணங்கள் உபயோகத்தில் உள்ளன. கொண்டபள்ளி பொம்மைகளை வீட்டு அறைகளில் அலங்காரமாகவும், நவராத்திரிப் பண்டிகையின் போது பொம்மைக் கொலுவில் நன்கு தெரியும் படி வைக்கிறார்கள்.



# இந்திய தேசீய அடிப்படை நிறுவனம் (என்.எஃப்.ஐ.)

மிகவும் தாழ்த்தப்பட்டவர்களின் முன்னேற்றத்திற்காக தானே இயங்கும் ஸ்தாபனமாய் உதவித் தொகை வழங்குவதாக அமைந்தது. சமுதாயத்தில் ஒவ்வொருவரும் கௌரவமாய் சுயமரியாதையுடன் சமமான வாழ்வை அடைய உரிமை பெற்றவர் என்பதை இந்த ஸ்தாபனம் ஏற்கிறது. தனிப்பட்டவரும் பல இனங்களும் தம் திறமையை அதிகரித்துக் கொள்ள இது ஊக்கம் அளிப்பதோடு அவர்கள் தம் வாழ்க்கையில் எதிர்ப்படும் பிரச்சினைகளைச் சமாளித்து முன்னேற உதவுகிறது.

## எமது திட்டங்கள்

__ஆணுக்குப் பெண் சமம், நீதி__ **:** ஆணுக்குப் பெண் சமம் என்றும் அவர்களுக்குச் சரியான நீதி கிடைக்க வேண்டும் என்பதை வலியுறுத்தி பெண் குழந்தை இழக்கும் உரிமைகளை அடையச் செய்து, அதை வாழ வைக்க இது தன் வேலைத் திட்டங்களில் ஒன்றாகக் கொண்டது. சமுதாய இன அடிப்படையில் பெண் சிசுக்கள் அழிக்கப்படுவதைத் தடுத்து, அவர்கள் வாழ வழி செய்யப் பல செயல் திட்டங்களை உருவாக்குவதே இதன் நோக்கம்.

__பொது விஷயங்களும் நகர்புற பராமரிப்பும்__ **:** இத்திட்டம் புது வித ஆட்சி முறையை வகுத்துக் கொடுப்பது. மனித வாழ்வின் முன்னேற்றத்திற்கு முன்னேறும் வழிகளையும் ஆட்சியை அடிமட்டம் வரை பரவலாக்குதலும் தம் பொறுப்பை உணர்ந்து வெளிப்படையாய், செயல்களுக்கு விளக்கம் தருவதோடு ஏழ்மையை அழிப்பதே இதன் குறிக்கோள். என்.எஃப்.ஐ. அறிக்கைகளை ஆய்ந்தும் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளுக்குப் பயிற்சியும் அளிக்க வகை செய்கிறது. தல சுயாட்சியில் பரிசுகளை அளிக்கவும் வழி வகுத்துள்ளது.

__பிராந்திய குறைகளை நேர்படுத்துதல்__ **:** வடகிழக்குப் பகுதியில் தென்படும் குறைகளைப் போக்க அங்குள்ள அரசாங்கத்தின் கீழ் இல்லாத பொது அமைப்புகளுடன் கைகோர்த்து ஆண் பெண் என்ற பாகுபாடு இல்லாது வாழ்க்கைப் பிரச்சினைகளைத் தீர்க்கவும் சுற்றுப்புறச் சூழல் பற்றி அறியச் செய்வதும் இதன் பணிகளாகும். இந்தப் பொது அமைப்புகளைச் செயல்படுத்தவும், கருத்துக்களையும் தகவல்களையும் பரிமாறிக் கொள்ளவும் வழி செய்து ஆராய்ச்சிக்கும் தகவல்களின் தொகுப்பிற்கும் ஊக்கம் அளிக்கிறது.

__தகவல் தொடர்பில் முன்னேற்றம்__ **:** தகவல் சாதனங்களை ஒருங்கிணைத்து முன்னேற்றத் திட்டங்களை நடைமுறையில் சமுதாய அமைப்புகள் கொண்டுவரச் செய்வதே இந்தத் திட்டமாகும். சமுதாய முன்னேற்றத்திற்கான தகவல்களை சீராக ஒழுங்குபடுத்தி நன்கு அறியச் செய்து என்.எஃப்.ஐ.யின் செயல் திட்டங்களை நன்கு தெரிந்து கொள்ளச் செய்வதே இதன் நோக்கமாகும்.

__என்.எஃப்.ஐ. முன்னேற்ற நிதி (என்.ஐ.எஃப்.)__ **:** இந்நிறுவனம் இந்த நிதியை இங்கிலாந்தின் சி.ஐ.வி.ஏ. என்ற நிறுவனத்தின் கூட்டோடு அமைக்கப்பட்டுள்ளது. இத்துடன் ஆக்ஸ்ஃபாம் என்ற அமைப்பும் சேர்ந்து ஒத்துழைக்கிறது. சுகாதார, பொதுநலப் பணிகளுக்கு இந்த நிதி சிறு தொகைகளை மானியமாக வழங்குகிறது.

*மேலும் விவரங்களை அறிய: நேஷனல் ஃபௌண்டேஷன் ஃபார் இந்தியா*
*கோர் ஐவ அ, யூஜி ஃப்ளோர், இந்தியா ஹேபிடெட் சென்டர், லோடி ரோட், நியூடில்லி -*
*போன்: 4641864/65, 4648490/9 ஃபேக்ஸ்: 4641867*

# அன்பு நண்பர்களே,





ஒவ்வொரு ஆண்டும் உலகச் சுற்றுப்புறச் சூழல் நாளான ஜூன் 5-ஆம் தேதியன்று உலகின் விலங்கினத்தையும் தாவரத்தையும் பாதுகாப்பது குறித்து நீண்ட நேரம் பேசுவோம். மறுதினமே, அதை மறந்துவிடுவோம். இந்த ஆண்டு அதிலிருந்து சற்று மாறுபடுவோமா? நம் நாட்டின் தாவரங்கள், விலங்குகள், நீர்வாழ் உயிரினம், புழு, பூச்சி, நுண்கிருமி, மனிதர்கள் - இவை பற்றியும் இவற்றின் உறைவிடம் பற்றியும் அறிந்து கொள்ள முயல்வோமா?

இந்தச் செழுமையான உயிரினங்களைப் பற்றி உங்களுக்குக் கூறுவதற்கு அம்புலிமாமா 'வசுதா' என்ற பல்லுயிரிய இணைப்பிதழை வெளியிடுகிறது. இந்திய தேசிய அடிப்படை நிறுவனம் (NFI) இதற்கு உறுதுணை அளிக்கிறது. செய்திகள் 'கல்ப விருட்சம்' என்ற சுற்றுப்புறச் சூழல் செயலமைப்பால் வழங்கப்பட்டது.

பல்லுயிரியம் என்றால் என்ன என்றும் அதைப் பாதுகாப்பது பற்றியும் 'வசுதா' விளக்கும். சில அரிய தாவரங்கள், விலங்குகள் இவற்றோடு நம் நாட்டின் எண்ணில் அடங்கா பயிர் வகைகளைப் பற்றியும் உங்களுக்குத் தெரிவிக்கிறது. பல்லுயிரியத்தைப் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டுள்ளோரை உங்களுக்கு அறிமுகம் செய்யப் போகிறது.

பல்லுயிரியத்தின் பன்முகத்தையும் 'வசுதா'வில் வெளிக்கொணர இயலவில்லை. உதாரணத்திற்கு நீர்வாழ் உயிரினங்கள், பலவகை உறைவிடங்கள் இவற்றைப் பற்றி அறிய நீங்கள் மற்றமொரு இதழுக்காகக் காத்திருக்க வேண்டும். எல்லாவற்றையும் அலசி எடுத்துக்கூற 'வசுதா' முனையவே இல்லை. இயற்கையிடமும் பல்லுயிரியத்தின்பாலும் உங்களுக்கு ஈடுபாட்டை ஏற்படுத்துவதே எங்கள் நோக்கம். உயிர்களிடத்து அன்பு செலுத்தி அவற்றைக் காக்க வேண்டும் என்ற எண்ணத்தை உங்கள் மனதில் உண்டாக்கவே விரும்புகிறோம். உலகச் சுற்றுப்புறச் சூழல் தினத்தன்று மட்டும் கட்டுரைகளையும் கதைகளையும் பேசுவதோ எழுதுவதோ அல்ல. ஞாபகமிருக்கட்டும், சின்னஞ்சிறு துளிகள் சேர்ந்தது தானே மாபெரும் கடல்!

உங்களன்புள்ள

Vinoo...

ஆசிரியர்,
அம்புலிமாமா

**தொழில்நுட்ப ஆலோசகர் :**
**கல்பவிருட்சம்** /NBSAP
**முகவரி:** 5, ஸ்ரீ தத்த கிருபா,
908, டெக்கான் ஜிம்கானா,
புனே - 411 004, இந்தியா.
**தொலைபேசி/நகல்** : 020-5654237
**மின்னஞ்சல்** : kalpavriksh@vsnl.net

## அரசும் பல்லுயிரியமும்

தாவர உயிரின வகைகளைக் காப்பது மத்திய, மாநில அரசின் பொறுப்பு. அவற்றின் வசிப்பிடங்களை தேசியப் பூங்கா அல்லது சரணாலயம் என்று அறிவித்து அவற்றைப் பராமரித்து வருகின்றன. இவ்விடங்களில் மனிதர்கள் வாழ அனுமதியில்லை. இத்தகைய இடங்கள் நம் நாட்டில் 550 உள்ளன. இது நம் நாட்டின் மொத்த பரப்பளவில் 5 சதவீதமாகும். வனவிலங்குகள் பாதுகாப்புச் சட்டம் காட்டுமிருகங்களை வேட்டையாடுவதைத் தடை செய்கிறது. பயிர்வகை, கால்நடைப் பிராணிகளைப் பாதுகாக்க விதை வங்கிகளும் சிறப்பு வளர்ப்பு மையங்களும் நிறுவப்பட்டுள்ளன. இதையும் மீறி மிருகங்களும், தாவரங்களும் அழிந்து வருகின்றன. பொதுமக்களின் ஒத்துழைப்பின்றி இவற்றையும் பல்லுயிரியத்தையும் பேண முடியாது என்பதை அரசு உணர்ந்துள்ளது. நீங்களும் இதில் இணைய விருப்பமா? அருகிலுள்ள பாதுகாக்கப்பட்ட இடங்களைக் கண்டுபிடித்து, அவற்றைப் பாதுகாக்க நீங்கள் எப்படி உதவ முடியும் என்று கேட்டுத் தெரிந்து செயலில் ஈடுபடுங்கள்.

Designed and produced by Chandamama India Ltd., 82 Defence Officers Colony Ekkatuthangal, Chennai - 600 097. Phone : 234 7384, 234 7399. Website : www.chandamama.org.

# பெரிய, சிறிய உயிரினங்கள்

உங்களால் எத்தனை வகை தாவர, உயிரினங்களின் பெயரைக் கூற முடியும்? பத்து? ஐம்பது? ஐம்பதுக்கு மேல் கூறிவிட்டால் நீங்கள் மேதாவி தான். இந்தியாவில் கடற்கரை ஓரங்களிலும் காட்டை ஒட்டிய பகுதிகளிலும் வாழும் சிறுவர்சிறுமியர் நூற்றுக்கும் மேற்பட்ட பெயர்களைக் கூறிவிடுவார்கள். இதில் அதிசயம் என்னவென்றால் இந்தக் குழந்தைகள் பள்ளிக்குக் கூட சென்றிருக்கமாட்டார்கள்.

சரி, எத்தனை அரிசி, கோதுமை, சோள வகைகளின் பெயர் உங்களுக்குத் தெரியும்? இரண்டு? ஐந்து? இவற்றில் பத்து வகைகளின் பெயர்களைக் கூறிவிட்டால் உங்களுக்கு ஒரு சலாம்! மணிப்பூர், கேரளா, சட்டீஸ்கர்மாநிலக் குழந்தைகள் சர்வ சாதாரணமாக ஒரு டஜன் தானிய வகைகளின் பெயர்களைக் கூறிவிடுவார்கள்.

இந்தியாவில் மொத்தம் 125000 தாவர, உயிரின வகைகள் உள்ளதை அறிவீர்களா? இது போக இன்னும் கண்டறியப்படாத பல்லாயிரக்கணக்கான உயிரினங்கள் உள்ளன (இதில் கண்ணுக்குத் தெரியாத நுண்கிருமிகளும் அடக்கம்). உலகிலுள்ள ஐந்து லட்சம் உயிரினங்களில் ஒரு சிறிய பகுதி தான் இது. பல்லுயிரியம் என்று அழைக்கப்படுவதில் ஒரு பிரிவு மட்டுமே. பல்லுயிரியத்தில் உறைவிடங்கள் (காடுகள், ஏரிகள், ஆறுகள், கடற்கரைகள், கடல்கள், மலைகள், புல்வெளிகள், பாலைவனங்கள்) அவற்றில் வாழும் ஜீவசக்திகள் எல்லாம் அடக்கம்!

இந்தப் பல்வகை உயிரினங்களும் உறைவிடங்களும் வெகுவேகமாக அழிந்து வருகின்றன. காடுகள் அழிக்கப்பட்டும் மிருகங்கள் வேட்டையாடப்பட்டும் புகை, விஷவாயுக்களால் காற்று மண்டலம் மாசுபடுத்தப்பட்டும் - அப்பப்பா, மூச்சே திணறுகிறது! நீங்கள் முதியவராகும் போது இப்போது உள்ள



கடந்த நூறு
ஆண்டுகளில் அழிந்து
போன பாலூட்டும்
இனத்தைச் சேர்ந்த
விலங்கு எது?

*சிறுத்தை. சட்டீஸ்கரிலுள்ள பஸ்தர்
பகுதியில் இது கடைசியாக
காணப்பட்டது.*

பல்லுயிரியத்தில் கால் பகுதி அழிந்தே போயிருக்கும்!

இந்த அழிவுக்குக் காரணம் யார்? நாம் தான்! தொழிற்சாலைகள், நகரங்கள், நாம் உபயோகிக்கும் பிளாஸ்டிக், காகிதம், பதப்படுத்தப்பட்ட உணவு வகைகள், மின்சாரம் - இவை தான்.

இந்த உலகில் மனிதர்கள் மட்டுமே இருந்தால் சலிப்பு ஏற்பட்டுவிடாதா? இதுதவிர, வேறு பல காரணங்களுக்கும் நாம் பல்லுயிரியத்தைப் பேணுவது அவசியம். நாம் அருந்தும் பால், உடுக்கும் உடை, உண்ணும் உணவு, மருந்து, நீர், ஏன் சுவாசிக்கும் காற்றுக் கூட பல்லுயிரியத்தின் பல அங்கத்தினர்களின் உழைப்பு, பரிசு!

இந்த பல்லுயிரியத்தைப் பாதுகாக்க நீங்கள் ஏதாவது செய்ய விரும்புகிறீர்களா? ஏற்கனவே பல சிறுவர்கள் பல்லுயிரிய தேசியச் செயல் திட்டத்தில் (NBSAP) ஈடுபட்டுள்ளனர். இது மத்திய அரசின் சுற்றுப்புறச் சூழல் அமைச்சகத்தின் செயல்திட்டம். இதன் ஒருங்கிணைப்பாளர் கல்பவிருட்சம் எனப்படும் 22 வருட செயலமைப்பு. பயோடெக்கன்சார்டியம் இந்தியா லிமிடெட் என்ற நிறுவனம் இந்தத் திட்டத்தை நிர்வகிக்கிறது.

மகாராஷ்டிர மாநிலத்தின் விதர்பாவில் பள்ளிச் சிறுவர்கள் பங்குகொண்ட ஒரு பொருட்காட்சியில் தாவரங்களில் இருந்து தயாரிக்கப்பட்ட விவசாயக் கருவிகள், பல் துலக்கும் குச்சி, கயிறு இன்னபிற பொருட்களை பார்வைக்கு வைத்திருந்தார்கள்.

சென்னை, புது டெல்லி, ஆகிய நகரங்களிலிருந்து வந்திருந்த உடல் ஊனமுற்ற குழந்தைகள் இந்தச் செயல் திட்டத்தில் **எல்லாக்** குழந்தைகளும் பங்குபெறுவதின் அவசியத்தை வலியுறுத்தினர். கர்நாடகத்தைச் சேர்ந்த குழந்தைகள் அம்மாநிலம் முழுவதும் உள்ள தாவர, உயிரின வகைகளைப் பட்டியலிட்டு பல்லுயிரிய வரைபடம் ஒன்றை அமைத்திருந்தனர்.

நாடெங்கிலும் ஆயிரக்கணக்கான மக்கள் இதில் (NBSAP) பங்கேற்று, இந்தியாவின் பல்லுயிரியத்தைப் பேண திட்டங்கள் தீட்டுவதில் ஈடுபட்டுள்ளனர். இயற்கையின் பரிசுகள் நமக்கு எல்லாக் காலத்திலும் கிடைக்க வழி செய்வதே அவர்களின் நோக்கம்.

இப்பொழுது சொல்லுங்கள்! நீங்களும் இதுபோல தாவர, உயிரின வகைகளைப் பாதுகாக்க ஏதாவது செய்யப் போகிறீர்கள் தானே?

**– சுஜாதா பத்மநாபன்**

***ஆஷிஷ் கோத்தாரி***

*ஒரு சிட்டிகை மண்ணில் 10 பில்லியன் கிருமிகள் உள்ளன என்றால் நம்புவீர்களா? சரி, ஒரு பில்லியனை எப்படி கணக்கிடுவது? உங்கள் பேனா மூடியை ஒரு பில்லியன் மடங்கு பெரிதாக்கினால் அதற்குள் இவ்வுலகையே புகுத்திவிடலாம்!*

# கண்கவர் தாவரங்கள்

இந்தப் படங்களைப் பாருங்கள். நம் நாட்டில் பதிவு செய்யப்பட்டுள்ள 47000 வகைத் தாவர இனங்களில் 6 மட்டுமே இவை. இப்படங்கள் அவற்றுக்கான குறிப்புகளுக்கு நேரே வைக்கப்படவில்லை. படங்களையும் குறிப்புகளையும் உங்களால் சரியாக ஜோடி சேர்க்க முடியுமா?

*ஜமாயுங்கள் பார்க்கலாம்!*

1



A

## பூப்பாசி (லிச்சன்)

இது பாசி (Alga), பூஞ்சையின் (Fungus) கூட்டமைப்பால் உருவானது. இதில் பாசி விரைவில் உலர்ந்து அழிந்துவிடும். பாசியின் நார்ப் பகுதி இது உலராமல் காக்கிறது. பாசி ஒளிச்சேர்க்கை மூலம் உணவு தயாரித்து அதைப் பூஞ்சையுடன் பகிர்ந்து கொள்கிறது. பூஞ்சைக்குப் பச்சையம் இல்லாததால் உணவு தயாரிக்க முடியாது. பூப்பாசி சுற்றுப்புற மாசினால் பெருமளவு பாதிக்கப் படுகிறது. ஓரிடத்தில் அதன் எண்ணிக்கையைக் கொண்டு அந்த இடம் எவ்வளவு மாசுபட்டுள்ளது என்பதை அறியலாம்.

B

## குஸும மரம் (ஸ்க்லெய்கீரா ஓலியோசா)

நம் நாட்டிலுள்ள பல மலர் தருக்கள் அயல்நாட்டைச் சேர்ந்தவை. அவை நம் நாட்டுப் பறவைகள், உயிரினங்களுக்கு புகலிடம் தர முடிவதில்லை. குஸும மரம் நம் நாட்டு மரம். கோடை காலத்தில் துளிர்விடும் இம்மரத்தின் இலைகள் சிவப்பு நிறமானவை. அவற்றை மரத்தின் மலர்கள் என்று நீங்கள் தவறாக எண்ணக்கூடும். முதிர்ந்த குஸுமத்தின் அடிமரத்தில் உள்ள பொந்துகள் பல்லி முதலிய சிறு உயிரினங்களின் வசிப்பிடமாகின்றன. இம்மரத்தின் பழங்களை பறவைகளும் அணில்களும் உண்கின்றன. விதைகளிலிருந்து கிடைக்கும் எண்ணெய் கூந்தல் தைலமாகவும் கொசுவிரட்டியாகவும் பயன்படுகிறது. அடுத்த முறை நீங்கள் மரம் நடும்பொழுது குஸும மரத்தையே நடுங்கள்.

2



## C சன்ட்யூ (டிரோசீரா புர்மானி)

பூச்சிகளைத் தேடிச் சென்று அவற்றைப் பிடித்துத் தின்னும் தாவரத்தைத் தெரியுமா? நம்ப முடியவில்லையா? உண்மை தான். இந்தியாவிலுள்ள பூச்சியுண்ணும் தாவரங்களில் சன்ட்யூவும் ஒன்று. ஒரு ரூபாய் நாணயத்தின் அகலமும் உயரமும் கொண்டிருக்கும். சதுப்பு நிலத்தில் வளர்கிறது. இதன் இலைகளின் மீது பிசுபிசுக்கும் திரவம் சுரக்கிறது. புழு பூச்சிகள் இந்த இலைகளின் மீது பட்டதும் நகர முடியாமல் ஒட்டிக் கொண்டுவிடும். பிறகு இலை மெல்லச் சுருண்டு பூச்சியை ஜீரணித்துவிடும்.







## D ஓமவல்லி (குல்வெல்)
## (டினோ ஸ்போரா கார்டிஃபோலியா)

இது மருத்துவ குணமுள்ள ஒரு கொடி. இலைகள் இதய வடிவில் இருக்கும். சில சமயம் தான் படரும் மரத்தையே மறைத்துவிடும் அளவுக்கு அடர்த்தியாக வளரும். நம் நாட்டின் மித வறட்சிப் பிரதேசங்களில் வளர்கிறது. இதன் தண்டை வெட்டி நீரில் போட்டுக் காய்ச்சி கஷாயமாக்கிப் பல நோய்களுக்கு மருந்தாகப் பயன்படுத்துகிறார்கள். மற்ற கொடிகளின் தண்டை வெட்டினால் அவை வறண்டுவிடும். ஆனால் ஓமவல்லியின் தண்டை வெட்டினால் கூட மறுபடியும் பூமிக்குள் வேர்விட்டு துளிர்த்துவிடும்.

## E ஃபாக்ஸ் டெயில் ஆர்கிட்
## (ரைன்கோஸ்டைலஸ் ரெடூசா)

இந்தியாவில் தெற்கு, வடகிழக்குப் பகுதிகளின் ஈரப்பாங்கான இடங்களில் உள்ள மரங்களின் மீது ஃபாக்ஸ் டெயில் ஆர்கிட் படர்கிறது. கோடையில் மலரும் இதன் இளஞ்சிவப்பு மலர்கள் கொத்தாகத் தொங்குவது நரியின் வாலைப் போலத் தோன்றும். இதன் பச்சைநிற வேர்கள் மரம் முழுவதும் அடர்ந்திருக்கும். காற்றிலுள்ள நீரையும், சத்துக்களையும் உறிஞ்சி எடுத்துக் கொள்வதற்கு ஏற்ற சிறப்பான வடிவமைப்பை அது பெற்றுள்ளது. மரத்தின் மீது படர்வதைத் தவிர இது மரத்திற்கு வேறெந்தத் தீங்கையும் விளைவிப்பதில்லை.




கருத்தும் படமும்: விவேக் கௌர் - ப்ரூம்.

# விதைகளைப் பாதுகாத்தல்

அஞ்சம்மா ஆந்திரப் பிரதேசத்தின் கங்குவார் கிராமத்தில் ஒரு சிறு குடிசையில் வசிக்கிறாள். குடிசையின் மூலையில் 50 சிறு கூடைகளில் அவள் குடும்பம் பல வருடங்களாகப் பயிரிடும் தானிய வகைகளின் விதைகள் சேகரித்து வைக்கப்பட்டுள்ளன. நெல், கடுகு, சோளம், கம்பு, கடலை வகைகள்...



ஒவ்வொரு ஆண்டும் அறுவடைக்குப் பின் முதிர்ந்த நல்ல விதைகளை எடுத்துச் சேகரித்து வைப்பது அவள் வழக்கம். விதைகளை மண், வேப்ப இலை, சாம்பல் இவற்றைப் போட்டு மூடி புழு பூச்சி தாக்காதபடி பாதுகாத்து வைப்பாள்.

அஞ்சம்மாவைப் போல் நம் நாட்டில் எவ்வளவோ விவசாயிகள் விதைகளை எதிர்கால உபயோகத்திற்காகச் சேகரித்துப் பாதுகாத்து வைக்கிறார்கள். இப்படி செய்யாவிட்டால் சிலவகைப் பயிர்கள் அடியோடு அழிந்து போகக் கூடும். பயிர் வகை என்றால் என்ன? வாழையைப் பாருங்கள். அதில் தான் எத்தனை வகை! பூவன், ரஸ்தாளி, மொந்தன், பச்சை வாழை, கற்பூர வாழை, செவ்வாழை... இதைத் தான் பயிர் வகை என்கிறோம். உருளைக் கிழங்கில் 16, தேங்காயில் 42, இஞ்சியில் 124 மற்றும் மாம்பழத்தில் ஆயிரத்திற்கும் மேலான வகைகள் இந்தியாவில் உள்ளன. அரிசியில் 50000 முதல் 60000 வகைகள் வரை உள்ளன. என்ன பிரமிப்பாக உள்ளதா?

சரி, இத்தனை வகை இருக்கிறதே, இதில் ஒன்று அழிந்தால் என்று கேட்கிறீர்களா? ஒவ்வொரு வகையும் ஒவ்வொரு விதமான மண்ணில் விளையும், நீர் தேவை மாறுபடும். ஒவ்வொரு சமயத்தில் அறுவடைக்குத் தயாராகும் (அப்போது தானே வருடம் முழுவதும் நமக்கு உணவு கிடைக்கும்). சில வகைகள் சிலவிதப் பூச்சிகளை எதிர்க்கும் தன்மை கொண்டிருக்கும். இப்படி ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையில் சிறப்பு வாய்ந்தது.

எனவே தான் இவற்றில் ஒன்றைக் கூட அழிந்து போக விவசாயிகள் விடுவதில்லை. ஒரே சமயத்தில் ஒரு பயிரின் பல வகைகளை விதைக்கின்றனர். ஒன்று பூச்சிகளால் தாக்கப்பட்டாலும் மற்றொன்று ஆரோக்கியமாக இருக்குமல்லவா? சில வகைகள் பண்டிகை கால உபயோகத்திற்கும் வேறு சில சுவைக்காகவும் பயிரிடப்படுகின்றன.

அடுத்த முறை கடைக்குச் செல்லும்போது தானிய, காய், கனி வகைகளைப் பார்க்கும் பொழுது அவற்றைப் பாதுகாத்துப் பயிரிடும் நம் நாட்டின் கோடிக்கணக்கான விவசாயிகளுக்கு நன்றி செலுத்தத் தவறாதீர்கள்!

- சுஜாதா பத்மநாபன்

ஆசிய சிங்கம் இந்தியாவின்
.................... மாநிலத்தில்
.................... பகுதியில்
காணப்படுகிறது.

குஜராத் மாநிலத்தில் கிர் தேசியப் பூங்கா மற்றும் சரணாலயத்தில்.



# இயற்கையைப் பேணும் தர்மம்

அழகிய கலைமான், சிங்காரா மான் கூட்டத்தோடு மாடு, எருமைகள் ஒற்றுமையாக ராஜஸ்தான் பாலைவனத்தில் புல் மேயும் காட்சியைக் கற்பனை செய்து பாருங்கள்! நம்ப முடிய வில்லையா? ஆனால் இது உண்மை! இங்கு வாழும் பிஷ்ணோயி இனத்தவர்களின் முனைப்பால் இது இன்று சாத்தியமாகியுள்ளது. எல்லா உயிருக்கும் இந்த உலகில் வாழ சமஉரிமை உண்டு என்ற எண்ணம் உடையவர்கள் அவர்கள்.

ராஜஸ்தானின் நாகௌர் மாவட்டத்தில் 1503-ஆம் வருடம் பிறந்த குரு மகராஜ் ஜம்போஜீ தார் பாலைவனத்தில் மனிதர்கள் உயிர் பிழைத்திருக்க அப்பகுதியின் பல்லுயிரியத்தைப் பாதுகாப்பது அவசியம் என்று உணர்ந்தார். 1542-ஆம் ஆண்டில் பிஷ்ணோயி என்ற இனத்தைத் தோற்றுவித்து 29 விதிகளையும் வகுத்தார்.

பிஷ்ணோயிகள் எல்லா உயிர்களையும் பாதுகாப்பவர்கள். விறகைக் கூட அதிலுள்ள பூச்சிகளை அகற்றிய பிறகு தான் அடுப்பில் எரிப்பர்! இவர்கள் சைவ உணவுதான் உட்கொள்வார்கள், புகை பிடிக்கமாட்டார்கள், தாவரங்களிலிருந்து தயாரிக்கப்பட்டச் சாயங்களைக் கூடப் பயன்படுத்த மாட்டார்கள். வயல்களைக் கூட அந்நிலம் பாதிக்காத அளவுக்குத் தான் உழுவார்கள். பாலைவனத் தாவரங்களை மேய்ந்துவிடும் என்பதால் இவர்கள் ஆடு, செம்மறி யாடுகளை வளர்ப்பதில்லை.

உயிர்களின்பால் இவர்கள் காட்டும் கருணையைப் பல கதைகள் எடுத்துக் கூறுகின்றன. 1737ல் ஜோத்புர் மன்னர் அபயசிங் நிறைய விறகு வெட்டிக் கொண்டுவருமாறு தன் ஆட்களுக்குக் கட்டளை இட்டார். அவரது ஆட்கள் அப்பகுதியிலுள்ள கெஜ்ரி மரங்களை வெட்ட முயன்றபோது பிஷ்ணோயி கள் அந்த மரங்களைக் கட்டிப் பிடித்துக் கொண்டு அவற்றை வெட்ட விடாமல் தடுத்தார்கள். வீரர்கள் மன்னனின் ஆணையை நிறைவேற்று வதற்காக மக்களையும் மரத்தோடு சேர்த்து வெட்டினார்கள். இப்படி இறந்தவர்கள் 363 பேர். இதை அறிந்த மன்னர் உடனே மரங்களை வெட்ட வேண்டாம் என்று கட்டளை இட்டார்.

இன்றும் பிஷ்ணோயிகள் ஹரியானா, ராஜஸ்தான், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் வாழ்ந்து வருகின்றனர்.

*- பீனா தாமஸ்*



நிலவறீழ் பறீலூ ஜகளில் மிகப் றுபரியவீ ஆசிய யறீற்ன.
மிகஅ சிறியவீ பிக்மிழிலூ. இவீ க ற்ஏவிரல் அளவே இருக்கும்.

# வாழ்வின் வண்ணக்கோலம்



இந்தக் காட்சியில் நீங்கள் காண்பது என்ன? இங்குள்ள பல்வேறு குழுக்களும் எப்படி
எழுதி அனுப்புங்கள். இரண்டு சிறந்த கட்டுரைகளுக்கு தலா ரூ.500/- பரிசளிக்கப்படும்.
'வாழ்வின் வண்ணக்கோலம்' கட்டுரைப் போட்டி, சந்தமாமா இந்தியா லிமிடெட்,



காராஷ்டிர மாநிலத்தின் வார்லி இனத்தவர்களின் ஓவியத் திரைப் போல் வரையப்பட்டது.

பிணைக்கப்பட்டுள்ளன? உங்கள் கருத்துக்களை 200 வார்த்தைகளுக்கு மிகாமல் எங்களுக்கு
உங்கள் கடிதங்கள் ஜூன் 30, 2002 ற்குள் கீழ்க்கண்ட முகவரிக்கு வந்து சேர வேண்டும்.
82, டிஃபன்ஸ் ஆஃபிசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை - 600 097.

# ஜார்தர்காமின் மறுபிறப்பு!

ஜார்தார்காமின் முதியவரான விஜய்ஜீ அன்று மலை உச்சி வரை நடந்து போய்விட்டு வரத் தீர்மானித்தார். அந்த கிராமம் உத்தராஞ்சல் மாநிலத்தில் மலை அடிவாரத்தில் உள்ளது. அவர் ஈட்டி, தேக்குமர மலைக் காட்டிற்கு மெதுவாக மேடுகளை ஏறிச் செல்லும்போது அந்தக் காடுகளை உயிர்ப்பிக்கத் தம் ஊர் போராடியது பற்றி நினைத்தவாறே சென்றார். 1980ல் அந்தப் போராட்டமும் எப்படி ஆரம்பமாயிற்று என எண்ணிப் பார்த்தார்.

அதற்குமுன் மக்கள் அந்தக் காடுகளின் மரங்களை வெட்டி வெளியூர்க்காரர்களுக்கு விற்று வந்தார்கள். வனத்துறை இதனைப் பார்த்தும் பாராதது போல இருந்துவிட்டது. கிராமவாசிகளும் அது தமது காடு இல்லை என்று பேசாமல் இருந்துவிட்டார்கள். அது அரசாங்கத்தினுடையது தானே என்று அசட்டையாக இருந்தார்கள்.

கடைசியில் அங்கிருந்த ஒரே மரத்தை ரகுபீர் வெட்டினான். பலர் அதே மரத்தைத் தாமும் வெட்டியெடுத்துக் கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்டார்கள். ஆனால் ரகுபீரோ யாருக்கும் தெரியாமல் இரவோடு இரவாக அதை வெட்டி எடுத்துக் கொண்டு போய் விட்டான். இதனால் ஆத்திரம் அடைந்து கிராமவாசிகளில் பலர் வனத்துறை காவலதிகாரியிடம் புகார் செய்யவே அவரும் ரகுபீர் பெரிய தொகையை அபராதமாகச் செலுத்த வேண்டும் என்று உத்தரவிட்டார்.

ரகுபீரோ, ''எனக்கு முன் எவ்வளவோ பேர்கள் இந்தக் காட்டின் மரங்களை வெட்டி இருக்கிறார்கள். அவர்கள் யாரென்று கூட என்னால் சொல்ல முடியும்,'' என்றான். இது கிராமவாசிகளிடையே சண்டை சச்சரவுகளை மூட்டிவிடுமென விஜய் ஜீ எண்ணினார். அதனால் எல்லோரிடமும் ரகுபீர் பற்றிக் கொடுத்த புகார் மனுவை திரும்பப் பெறும்படி வேண்டினார். இது அக்கிராமவாசிகளின் கண்களைத் திறந்துவிட்டது. அப்போது தான் அவர்கள் தம் கிராமத்துக் காடே முழுவதுமாக அழிந்து போய்விட்டதைக் கண்டார்கள்.



காட்டு ஓடைகள் வறண்டு போயின. ஆடு, மாடுகள் மேயப் புல்வெளி இல்லை. வீட்டு உபயோகத்திற்கு விறகு வெட்டிக் கொண்டுவர வெகுதூரம் போக வேண்டி இருந்தது. இனி பஞ்சமும் பட்டினியும்தானோ

என்று எல்லோரும் எண்ணி அஞ்சினார்கள். கிராமத் தலைவன் கிராம வாசிகளின் கூட்டத்தைக் கூட்டினான். அப்போது எல்லோரும் காட்டில் மரக் கன்றுகளை நட்டு அதை முன்போல அடர்ந்த காடாக ஆக்கிவிட வேண்டும் என்று வலியுறுத்தினார்கள். இதற்காக காட்டைப் பராமரித்துப் பாதுகாக்க ஒரு குழு அமைக்கப்பட்டது. யாருமே மரம் வெட்டக்கூடாது என்றும் மற்ற காட்டுப் பொருள்களைப் பயன்படுத்தக் கட்டுப் பாடுகளும் விதிக்கப்பட்டன. பரமேஷ்வரும் ரமாதேவியும் எல்லாவற்றையும் கண்காணிக்க நியமிக்கப்பட்டனர். கட்டுப்பாட்டை மீறியவருக்குப் பெரிய தொகை அபராதமாக விதிக்கப்பட்டது. பரமேஷ்வர் குண்டாந்தடி எடுத்துக் கொண்டு காவல் புரிந்தான்.

ரமாதேவியோ யாராவது அக் காட்டின் பக்கம் போனாலோ திட்டி தண்டித்தாள். இவ்வாறு கட்டுப்பாடு களுடன் நடந்ததால் மொட்டையான காடு நன்கு வளர்ந்துவிட்டது. ஓடை களில் மீண்டும் நீர் ஓடத் தொடங்கியது. புல்வெளிகள் பச்சைப் பசேலெனக் கண்களைக் கவர்ந்தன. இருபது ஆண்டு களில் அது முன்பிருந்த அடர்ந்த காடாக ஆகிவிட்டது.

விஜய் ஜீ மலையின் உச்சியை அடைந்து சுற்றிலும் பார்த்தார். ஓரிடத் தில் புலியின் உறுமல் கேட்டது. ஒரு சிங்கம்கூட அந்தக் காட்டைத்தன் உறை விடமாக ஆக்கிக் கொண்டது. கிராம வாசிகள் கவலை இல்லாமல் இருந் தனர். இவற்றை எல்லாம் கண்டும் நினைத்தும் புன்னகை புரிந்து நின்றார்!

– ரோஷ்னி குட்டி

இயற்கை வைத்தியத்தில் இந்தியாவின் கிராமத்தின ரும் பழங்குடியினரும் கை தேர்ந்தவர்கள். மொத்தம் 4500 தாவர வகைகளைக் கொண்டு 50000 மருந்து களைத் தயாரிப் பதில் இவர்கள் வல்லவர்கள்.

## வித்தியாசம் என்ன?



பத்து ஆண்டுக்கு முன் ஒரு கிராமச் சூழல்...

...இன்று அதன் நிலை



இந்த இரு படங்களில் என்ன மாறுதல்கள் தென்படுகின்றன எனக் கூறுங்கள்.

# விநோத விலங்குகள்

*சில விலங்குகளின் படங்களைஇங்கு பார்க்கிறீர்கள். நம்நாட்டில் உள்ள 51,000 விலங்கினங்களில் ஐந்து மட்டுமே இவை.*

## ஹூலாக் கிப்பன்
## (ஹைலோபேட்ஸ் ஹூலாக்)



Abi Tamim

இந்தியாவின் வடகிழக்குப் பகுதிகளிலுள்ள மழைக் காடுகளில் வசிக்கும் மனிதக் குரங்கு இனம் இது. இந்தியாவின் ஒரே வாலில்லாக் குரங்கு. இவற்றில் வயது முதிர்ந்த ஆணும் பெண் குட்டியும் கறுப்பு நிறம். வயது முதிர்ந்த பெண் குரங்கு மஞ்சள் நிறத் திலிருக்கும். இதன் கைகள் கால்களைவிட நீள மானவை. வாழ்நாளில் பெரும் பகுதியை மரத்தின் மீதே கழிக்கும். மரத்திலுள்ள கிளைகளைப் பிடித் துத் தாவிச் செல்லும். கூட்டமாக வாழும். பழங்கள், இலைகள், பூச்சிகள், சிலந்தி முதலியவற்றை உண் ணும். விடியற்காலையில் இலைகளின் மீது காணப் படும் பனிநீரை விரும்பிச் சுவைக்கும்.



Vivek Gour-Broome

## ஆபரண வண்டு

இதன் உடல் பொன் போல் மின்னும். மழைக் காலத்தில் அதிகமாகத் தென்படும் இந்த வண்டு அதிக நாட்கள் உயிர் வாழ்வதில்லை. மழைக்காலம் முடிந்த வுடன் முட்டையிட்டுவிட்டு இறந்துவிடும். முட்டை கள் ஷிரிஷ் மர வேர்களில் இடும். ஷிரிஷ் மர இலைகளே குஞ்சுகளின் உணவு. ஒன்பது மாதங்களில் இவை வளர்ந்து பெரிய வண்டாகும். பழங்குடியினர் இதன் பொன்வண்ண இறகுகளை ஆபரணங்கள் செய்ய உபயோகிக்கின்றனர். (ஆனால், நீங்கள் அப்படிச் செய்யாதீர்கள்!)

## கானக மயில்

**(கிரேட் இண்டியன் பஸ்டர்ட்)**

***(ஆர்டியோடிஸ் நைக்ரிசெப்ஸ்)***

நம் நாட்டைச் சேர்ந்தது, உருவில் பெரியது, அரிதாகக் காணப்படுவது எது? அதுதான் கானக மயில். நம் நாட்டின் அழிந்துவரும் பறவையினம். வறண்ட பகுதிகளில் எல்லாம் ஒரு காலத்தில் மிகுதியாகக் காணப்பட்ட இது இன்று குறுகிய நிலப்பரப்பில் மட்டுமே பிழைத்துள்ளது. இளங் குருத்துக்கள் பல்லி, வெட்டுக்கிளி, பூச்சி புழுக்களையும் மற்ற சிறு உயிரினங்களையும் உண்ணும்.


Asad Rahmani/Sanctuary Photo library

மனிதர்கள் வேட்டையாடுவதாலும் விவசாயத்திற்காக காடுகள் அழிக்கப் படுவதாலும் இவற்றின் எண்ணிக்கை இன்று குறைந்துவிட்டது. தற்போது இவை மேற்கு மற்றும் மத்திய இந்தியாவில் காணப்படுகின்றன.


Vivek Gour-Broome

## தோல்முதுகு ஆமை

**(லெதர் பேக் டர்ட்டில்)**

***(டெர்மோகீலிஸ் காரியாசியா)***

இந்த அற்புதப் பிராணி உலகின் மிகப்பெரிய கடல் ஆமை. மற்ற ஆமைகளின் ஓட்டைப் போல இதன் ஓடு கடினமாய் இருப்பதில்லை; கனமான தோலால் ஆனது. இது வாழ்நாளைக் கடலிலேயே கழிக்கிறது. ஜெல்லி மீன்களை விரும்பி உண்ணும். பெண் ஆமை வருடம் ஒருமுறை அந்தமான் நிகோபார் தீவுகள் மற்றும் தென்கிழக்கு ஆசிய கடற்கரைகளுக்கு வந்து முட்டையிட்டுச் செல்லும். வேட்டையாடுவதாலும் மீன் பிடிக்கும் வலைகளில் சிக்குவதாலும் கடற்கரைகளில் மக்கள் நடமாட்டத் தாலும் இவற்றின் எண்ணிக்கை இன்று வெகுவாகக் குறைந்துவிட்டது.

## பவளம்


Pankaj Sekhsaria

பவளம் வளரும் மென்பகுதிகள் (Polyps) என்று அழைக்கப் படும் விலங்கினத்தின் கூட்டமைப்பால் உருவாவது. இவை கடல்வாழ் உயிரினத்தின் உறைவிடமாக பவளப் பாறை திகழ்கிறது. உயிருள்ள பவளம் கடற்பாசியை உண்டு கடலில் வாழ்கின்றன. கடல்நீரிலுள்ள சுண்ணாம்புச் சத்தை எடுத்துத் தம் மேல் தோலை உருவாக்கு கின்றன. பல இனத்தைச் சேர்ந்த பவளங்களின் மேல் தோலி னால் உண்டாவது தான் பவளப் பாறை. நூற்றுக்கணக்கான கடல்வாழ் உயிரினத்தின் உறைவிடமாக பவளப் பாறை திகழ்கிறது. உயிருள்ள பவளம் நீலம், பச்சை, பழுப்பு, மஞ்சள் நிறங்களில் காணப்படும். தெளிவான வெப்பக் கடல் பிரதேசங்களில் இவை மிகுந்திருக்கும். லட்சத் தீவுகளிலும் அந்தமான் நிகோபார் தீவுகளிலும் அழகான பவளப் பாறைகளைக் காணலாம்.

தொகுப்பு : ***விவேக் கௌர்-ப்ரூம்***

# பல்லுயிரியமும் நீங்களும்

*வீடு, பள்ளி, வெளியிடம் - இவற்றில் நாம் எங்கு எந்தச் செயலைச் செய்தாலும் அது நம்மைச் சுற்றியுள்ள தாவர, உயிரினங்களைப் பெருமளவு பாதிக்கிறது. உதாரணத்திற்கு நகரவாசிகள் தம் இல்லங்களில் சலவைக்கல் கருங்கல் போன்றவற்றைப் பதிக் கின்றனர். இதற்காக காடுகளும் அவற்றில் வாழும் மிருகங்களும் மற்ற இயற்கைச் செல்வங்களும் அழிக்கப்படுவது உங்களுக்குத் தெரியுமா?*

*கீழே உள்ள வினாக்களின் இரண்டு விடைகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுங்கள். கீழுள்ளமதிப்பீட்டுமுறைப்படி பல்லுயிரியத்தைப் பேணநீங்கள் எவ்வாறு உதவுகிறீர்கள் என்று அறிந்து கொள்ளுங்கள். சுற்றுப்புறச் சூழல் நம்மால் எப்படிப் பாதிக்கப்படுகிறது என்பதை விளக்கங்களைப் படித்துப் புரிந்து கொள்ளுங்கள்!*

1. வெளியே தங்க நேரிட்டால்
   அ) தாகத்தைத்தணிக்க பாட்டில்களில் அடைத்த நீர் அல்லது டெட்ராபாக் (Tetrapack) பானங்களைப் பருகுவீர்களா?
   ஆ) கையில் தண்ணீர் எடுத்துச் செல்வீர்கள் அல்லது இளநீர், எலுமிச்சம்பழ ரசம், நீர் மோர் இவற்றை கண்ணாடி அல்லது எவர்சில்வர் டம்ளர்களில் வாங்கிக் குடிப்பீர்களா?
2. விளையாடி மகிழ
   அ) மனித சக்தியைச் செலவு செய்யும் விளையாட்டைத் தேர்ந்தெடுப்பீர்களா?
   ஆ) எலக்ட்ரானிக் மற்றும் பாட்டரிகளால் இயங்கும் பொருட்களை விரும்புவீர்களா?
3. அணிய விரும்புவது
   அ) பாலியஸ்டர், டெரிகாட்டன், நைலான் ஆகியவற்றால் தயாரித்த உடையா?
   ஆ) பருத்தி உடையா?
4. பள்ளிக்கு தினமும் செல்வது
   அ) காரிலா சொந்த வாகனத்திலா?
   ஆ) நடந்து, சைக்கிள் அல்லது பஸ்ஸிலா?
5. நண்பருக்குக் கடிதம் எழுதுகையில்
   அ) காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும் எழுதுவீர்களா?
   ஆ) காகிதத்தின் இரு பக்கங்களிலும் எழுதுவீர்களா?

**மதிப்பீட்டு முறை :**

கேள்விகளுக்கான விடைகள் விளக்கங்களுடன் கொடுக்கப்பட்டுள்ளன. உங்கள் விடைகள் இங்குள்ள விடைகளோடு ஒத்திருந்தால் உங்களுக்கு 10 மதிப்பெண். இல்லாவிட்டால் உங்கள் மதிப்பெண்ணில் இருந்து 10ஐக் குறைத்துக் கொள்ளுங்கள். 50 மதிப்பெண் பெற்றால் நீங்கள் உயிரினங்களின் நண்பர். 40 அல்லது அதற்கும் குறைவாகப் பெற்றிருந்தால் உங்கள் வாழ்க்கை முறையைக் கட்டாயம் மாற்றிக் கொள்ள வேண்டும்.



## விடைகள்

1. ***ஆ.*** கடைகளில் தண்ணீர் பிளாஸ்டிக் பாட்டில், பைகளில் அடைத்து விற்கப் படுகிறது. பிளாஸ்டிக் மண்ணோடு மட்கிப் போகாது. இவற்றை உணவுப் பொருள் என்றெண்ணி விலங்குகளும் பறவைகளும் விழுங்கிவிடுகின்றன. கடல் ஆமைகள் இவற்றை ஜெல்லி மீன் என்று ஏமாந்து உண்ணுகின்றன. டெட்ராபாக்குகள் தயாரிக்கப் பயன் படும் காகிதம் அலுமினியம் இவற் றைப் பெற காடுகளை அழிக்கின் றனர். அலுமினியமும் மண்ணில் மட்குவதில்லை.
2. ***அ.*** பழைய பாட்டரிகளிலுள்ள ஈயம் மிருகங்களுக்குக் கேடு விளைவிக்கும். மனிதர்களின் மூளையைத் தாக்கும் நரம்புத் தளர்ச்சி, ரத்த அழுத்தம் போன்ற நோய்களை ஏற்படுத்துகிறது. நம் நாட்டில் பாட்டரிகள் சரியான முறையில் அப்புறப்படுத்தப்படுவது இல்லை.
3. ***ஆ.*** பாலியஸ்டர் போன்ற செயற்கை இழை ஆடைகள் பெட்ரோலியப் பொருள்களால் தயாரிக்கப்படுபவை. காடுகளை அழித்தும் கடலில் குடைந் தும் பெட்ரோல் எடுக்கப்படுகிறது. அதனால் உயிரினங்கள், தாவரங்கள் பெரும் அழிவுக்கு உள்ளாகின்றன.
4. ***ஆ.*** நிறைய கார்கள் நிறையப் புகையை வெளியிடும், அதிக அளவில் பெட் ரோல் செலவாகும். இது சுற்றுப்புறச் சூழலைப் பாதிக்கிறது. எனவே பஸ், சைக்கிள், நடைப்பயணம் இவையே சுற்றுப்புறத்திற்கு நன்மை பயக்கும்.
5. ***ஆ.*** காகிதம் தயாரிக்க மரம் பயன் படுகிறது. காகிதத்தின் ஒரு பக்கத்தில் எழுதுவதால் அதிகக் காகிதங்கள் பயன் படுத்துகிறோம். இது மறைமுகமாக அதிக மரங்கள் வெட்டப்படுவதற்கு வழி வகுக்கிறது.

***– சாந்தா பூஷண்***




### புதிர்களுக்கான விடைகள்

**பெரிய சிறிய உயிரினங்கள் :** *இருவாய்க் குருவி, மயில், தும்பி, காண்டாமிருகம், புலி, முதலை, பல்லி, மட் ஸ்கிப்பர், நண்டு, மீன், தவளை, அன்னம், அணில், குருவி, குரங்கு, ஆமை, நத்தை, மான், கரடி, வண்ணத்துப் பூச்சி, மலைப் பாம்பு, கிளி, மண்புழு, மரம், தாமரை, புல், மணி ப்ளாண்ட்.*

**கண்கவர் தாவரங்கள் :** A-3, B-5, C-2, D-1, E-4

**வித்தியாசம் என்ன :** *காணாமல் போன தேன் கூடு, குறைந்த எண்ணிக்கைப் பறவைகள், இறந்த மீன்கள், வெட்டுப்பட்ட மரம், குடிசை யின் இடத்தில் கட்டடம், ஆற்றில் குப்பையை எறியும் பெண், செடிகளில் குறைந்த மலர்கள்.*

**ஜோடி சேருங்கள் :** 1-D, 2-A, 3-B, 4-C

# சாயம் தோய்க்கும் விளையாட்டு!

*உங்கள் பருத்தித் துணிகளுக்கு ரசாயன சாயங்களை ஏற்றாதீர்கள்.*
*தாவரத்திலிருந்து எடுக்கப்பட்ட சாயங்களினால்*
*உங்கள் ஆடைகளை மிளிரச் செய்யுங்கள்.*
*செயற்கை இழை உடைகளுக்கு இதைப் பயன்படுத்தாதீர்கள்.*
*முதலில் பழைய வெள்ளைப் பருத்தித் துணியில் சாயம் ஏற்றிப் பாருங்கள்.*

நடுத்தர அளவுள்ள இரண்டு, மூன்று பீட்ரூட்களை துண்டுதுண்டாக வெட்டுங்கள். துண்டுகளை ஒரு பாத்திரத்தில் போட்டு அவை மூழ்குமளவுக்கு நீரை ஊற்றுங்கள். அடுப்பில் பாத்திரத்தை ஏற்றி நீர் சிவப்பானதும் இறக்கிவிடவும். இந்த நீரை வடித்துக் கொள்ளுங்கள். உங்கள் சாயம் ரெடி. (பீட்ரூட் துண்டங்களைப் பொரியல் செய்து சாப்பிடலாம்.)

வடித்த சாயத்தை அடுப்பில் குறைந்த தீயில் வைக்கவும். உங்கள் பருத்தித் துணியை அதில் போடவும். துணியில் சாயம் சரியாக ஏற அவ்வப்போது அதை ஒரு குச்சியால் புரட்டவும். துணி இளஞ்சிவப்பு நிறமானதும் அடுப்பை அணைக்கவும். துணி சாயத்திலேயே பனிரெண்டு மணிநேரம் ஊறட்டும். சாயம் ஓடாமலிருக்க சிறிது விநிகர் சேர்க்கவும்.



பீட்ரூட்டிற்குப் பதிலாக செம்பருத்திப் பூ, பச்சை நிறத்திற்குப் பசலைக்கீரை, மஞ்சளுக்கு இலுப்பைப் பூ, பழுப்பு அல்லது கருப்புக்கு காய வைத்து வேக வைத்த நெல்லிக்காயையும் பயன்படுத்தலாம்.

கக்கணம், கல்யாணமுறுக்கு, குரங்கு மஞ்சநாத்தி, மருதாணி போன்றவற்றை உலர்த்தி வைத்துக் கொண்டால் எந்நேரமும் சாயங்களைத் தயாரிக்கலாம். இவற்றை நிழலில் உலர்த்தினால் சாயம் ஓடாமலிருக்கும்.

அடுத்த முறை துணிக்குச் சாயம் தேவைப்பட்டால் இவற்றை நீரில் ஊற வைத்தால் போதும்.

**- ஸ்ருதி தேவி**

1970களில் இமயமலைச் சாரலில் மரங்கள் வெட்டப்படுவதை மக்கள் ஒரு நவீன இயக்கத்தால் தடுத்தனர். மரங்களைக் கட்டிப்பிடித்துக் கொண்டு நடத்தப்பட்ட அந்த இயக்கத்தின் பெயர் என்ன?

சிப்கோ இயக்கம்.

தொகுப்பு : *சீமா பட்*

# நேஷனல் ஃபௌண்டேஷன் ஃபார் இந்தியா (என்.எஃப்.ஐ.) கொண்டாடுவது 10வது ஆண்டு



*மிஸ் சூசன் பிரெஸ்ஃபோர்டு, தலைவர், ஃபோர்டு ஃபௌண்டேஷன் அவர்களால் பத்தாவது ஆண்டுவிழாவின் போது வெளியிடப் பட்டது.*

*இதைத் தக்க ஆசிரியர் களைத் தேர்ந்தெடுத்து (என்னையும் சேர்த்து) உயர்தரமாக அளித்த என்.எஃப்.ஐ. யை நான் மிகவும் பாராட்டுகிறேன். இந்தியாவில் இதைவிட அருமையானதைப் பார்த்ததாக எனக்கு நினைவு இல்லை. இதுபோல் மீண்டும் என்.எஃப்.ஐ. முயல வேண்டும்.*

*- சுந்தர் புர்ரா, ஆலோசகர், எஸ்.பி.ஏ.ஆர்.சி., மும்பை.*

*''இது மிகவும் உபயோக கரமான ஆர்வம் அளிக்கும் தொகுப்பு''*

*- ஆஷிஷ் கோத்தாரி, இணைப்பாளர், என்.பி.எஸ்.ஏ.பி.*

*''கட்டுரைகள் பொருத்தமாய் மிக்க ஆர்வம் ஊட்டுவனவாக உள்ளன.*

*- தீப் ஜோஷி ப்ரதான்.*

*ஆசிரியர்களின் மிகச் சிறந்த கட்டுரைகள். என்.எஃப்.ஐ. யின் பத்து ஆண்டுகால சேவையை கொண்டாட இது ஏற்ற வழியே.*

*- நீலிமா மந்திர்.*

**தானே முன்வந்து பணிபுரிய ஒரு பொதுநோக்கை ஒரே மேடையில் பலரிடமிருந்தும் பலநிறுவனங்களிடமிருந்தும் எதிர்காலத்தை உருவாக்க அவர்களது கருத்துக்களைக் கேட்க வாய்ப்பு கிடைக்கிறது. அடித்தளத் தொண்டர்கள், இயக்கங்களின் தலைவர்கள், அரசு சார்பிலா நிறுவனங்களை நிறுவியவர்கள், பண உதவி புரியும் திட்ட நிர்வாகிகள், அரசாங்கப் பார்வையாளர்கள், பேரறிஞர்கள் ஆகியோர் கூடி கருத்துப் பரிமாற்றம் செய்கிறார்கள். சுற்றுப்புறச் சூழல் பற்றிய திட்டங்கள், ஐயப்பாடுகள், செயல்பாடுகளின் வரையறுப்பு, ஜனநாயக முறையில் சிந்தனை எனப் பல்முனைகளில் கட்டுரைகள் அமைந்துள்ளன. இம்மாதிரியான பொதுப் பிரச்சினை அறிவிற்கு விருந்தளிப்பதாக இருப்பதும் சுயமாகப் பணிபுரியும் அமைப்புகள் ஒன்று கூடிப் பேசவும் அரிய வாய்ப்பை அளிக்கிறது.**

*பிரதிகளுக்குத் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :*

**நேஷனல் ஃபௌண்டேஷன் ஃபார் இந்தியா**

கோர் IV A, யூஜி ஃப்ளோர், இந்தியா ஹேபிடெட் சென்டர், லோடி ரோட், நியூடில்லி - *110003.*

# பாரத ரத்ன சி. சுப்ரமணியம்

## சமுதாயத் தலைமைக்கும் நன்கு வாழத் திட்டமிட ஃபெலோஷிப்கள்

**நேஷனல் ஃபௌண்டேஷன் ஃபார் இந்தியா சமுதாயத் தலைமைக்கும் நன்கு வாழத் திட்டமிடுவதற்கும் பாரத ரத்னசி. சுப்ரமணிய ஃபெலோஷிப்களை இந்த அமைப்பின் நிறுவனத் தலைவர் திரு.சி. சுப்ரமணியத்திற்கு மரியாதை செலுத்தும் வகையில் ஏற்படுத்தப்பட்டுள்ளன.**

இந்த வருடாந்திர ஃபெலோஷிப்கள் இரண்டு வகை. ஒன்று சுயமாகப் பணிபுரியும் தொண்டர்களின் அமைப்பிற்கு, மற்றது சமுதாயத் தலைமைக்கு.

ஒவ்வொரு ஃபெலோஷிப்பும் ஒரு லட்சம் ரூபாய் வீதம் நான்கு ஃபெலோஷிப்கள் ஒவ்வொரு ஆண்டும் வழங்கப்படுகின்றன. ஒவ்வொரு வகையிலும் இரண்டு ஃபெலோஷிப்கள்.

இந்த ஃபெலோஷிப்கள் ஃபோர்ட் ஃபௌண்டேஷனின் (Ford Foundation) ஆதரவு பெற்றவை. சுயமாகப் பணிபுரியும் தொண்டர்கள் அமைப்பிலிருந்து ஃபெலோஷிப்களுக்காகத் தேர்ந்து எடுக்கப்படுபவர்கள். முதன்மையாக அவர்கள் உணவு, வாழ்வதற்கான பாதுகாப்பு போன்ற பிரச்சனைகள் பற்றிக் கலந்து பேசி செயல்படுவார்கள். இந்த ஃபெலோஷிப்கள் அவர்களது திறமை, தலைமைக்கான தகுதி மற்றும் வாழ வழிகள் பற்றி செயல்பட தம் திறமைகளை வெளிப்படுத்த இயலும்.

சமுதாயத் தலைமைக்கான ஃபெலோஷிப்கள் சுயமாகப் பணிபுரியும் அமைப்புகளிலிருந்து தேர்ந்தெடுத்து அவர்களது தலைமை தாங்கும் திட்டங்களை செயலாக்க உதவும். தலைமைக்கான திறமை தொழில் நுணுக்கம், இயற்கை அளிக்கும் வசதிகளை அந்தந்த இடங்களிலேயே பயன்படுத்துதல், நிலம், நீர், காடுகள் போன்றவற்றைப் பராமரித்து தேவையான அளவிற்குப் பயன்படுத்துதல் போன்ற விஷயங்களை வலியுறுத்தும்.

### தகுதிகள்

- நடுநிலை சுயமாய்த் தாமே பணியில் ஈடுபட்டுள்ளவா?
- உணவு மற்றும் வாழ வகை செய்ய ஆர்வம் கொண்ட பெண்மணிகள்.
- வாழ வழி வகுத்துக் கொடுப்பதில் தலைமை தாங்கி நல்ல அனுபவம் பெற்றவர்கள்.

### விண்ணப்பங்களுடன் இணைத்து அனுப்பப்பட வேண்டியவை

- செயல்பாட்டின் சுருக்கம்.
- கடந்த காலப் பணிகள் பற்றிய ஒரு சிறு தொகுப்பு.
- ஃபெலோஷிப் கிடைத்தால் அந்தத் தொகை எந்த குறிப்பிட்ட பணிக்குச் செலவிடப்படும் என்பது பற்றிய திட்டம்.

**மேலும் விவரங்கள் பெற அணுக வேண்டிய முகவரி :**
**நேஷனல் ஃபௌண்டேஷன் ஃபார் இந்தியா**
கோர் IV A, யூஜி ஃப்ளோர், இந்தியா ஹேபிடெட் சென்டர், லோடி ரோட், நியூடில்லி - 110 003.

# நம் பிரதம மந்திரிக்கு எழுதுங்கள்!

பல்வகை தாவர, உயிரின வகைகளைப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணத்தை வசுதா! உங்கள் மனதில் உருவாக்கி இருந்தால் இந்தக் கடிதத்தில் கையொப்பமிட்டு, **வசுதா, சந்தமாமா இந்தியா லிமிடெட், 82, டிஃபென்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை - 600 097** என்ற முகவரிக்கு அனுப்புங்கள். இவற்றை எல்லாம் சேர்த்து நாம் நம் பிரதம மந்திரிக்கு அனுப்பி இவற்றின் அடிப்படையில் நடவடிக்கை எடுக்குமாறு வேண்டுவோம்.

---

**மதிப்பிற்குரிய பிரதம மந்திரி அவர்களே,**

நல்ல ஆரோக்கிய வருங்கால வாழ்வை எதிர்பார்க்கும் சிறார்களாகிய நாங்கள் அன்றாட வாழ்வில் அழிவைத் தரும் பொருள்கள் அதிகமாய்ப் பயன்படுத்தப் படுவது கண்டு மிக்க வேதனை அடைகிறோம். எங்கள் பெற்றோர்களும் முன்னோர்களும் அபாயகரமற்ற எளிய வாழ்வு வாழ்ந்தார்கள். ஆனால் இன்று நாங்களோ மனிதர்களையும் மிருகங் களையும் தாவரங்களையும் அழிக்கும் பொருள்கள் பற்றிய விளம்பரங்களுக்கிடையே வேதனையுடன் வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

**எனவே தங்களிடம் இந்த வேண்டுகோள்களை விடுக்கிறோம்.**

1. பொது வாழ்வில் அழிவைத் தரும் ரசாயன வண்ணங்கள், பூச்சிக் கொல்லி மருந்துகள், ரசாயன செயற்கை உரங்கள், பிளாஸ்டிக் பைகள் மற்றும் உணவுப் பொருள்களில் சேர்க்கப்படும் பலவிதக் கலவைகள் ஆகியவை தயாரிக்கப்படாமல் நிறுத்த எல்லாவித நடவடிக்கைகளையும் எடுக்குமாறு வேண்டுகிறோம்.
2. இந்த ரசாயனப் பொருள்களுக்கு மாற்றாக துணிப் பைகள், தாவரங்களிலிருந்து கிடைக் கும் வண்ணங்கள், சாயங்கள், இயற்கை உரம், தாவரத் தயாரிப்பாலான பூச்சிக் கொல்லி மருந்துகள் மற்றும் மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் தாவரங்களுக்கும் தீங்கு இழைக்காத பொருள்களைப் பயன்படுத்த ஊக்கம் அளிக்குமாறு வேண்டுகிறோம்.

நாங்களும் இத்தகைய நாசகார அழிவுப் பொருள்களைப் பயன்படுத்தாமல் இயற்கை அளிக்கும் மாற்றுப் பொருள்களையே எம் அன்றாட வாழ்வில் பயன்படுத்துவோம் என்று உறுதி கூறுகிறோம். எங்கள் குடும்பத்தவரையும் நண்பர்களையும் இவ்வாறே செய்யுமாறு வற்புறுத்துவோம்.

மாண்புமிகு பிரதம மந்திரி அவர்களே! நீங்கள் உரிய நடவடிக்கைகளை மேற்கொண்டு எங்கள் வருங்காலத்தையும் நம் இயற்கைச் செல்வங்களான பலவிதத் தாவரங்களையும் உயிரினங்களையும் பாதுகாத்து எங்களுக்கு நல்வாழ்வு அளிக்குமாறு வேண்டிக் கொள்கிறோம். எங்களது இந்த வேண்டுகோளுக்கு அனுகூலமான பதிலைத் தங்களிடமிருந்து எதிர்பார்க்கிறோம்.

தங்களது அன்புள்ள,

*(வாசகரின் கையொப்பம்)*

பெயர் : ______________________ வயது: __________

முகவரி: ______________________

______________________

## கஷ்மீர நாட்டுப்புறக் கதை

உலகின் சொர்க்கம் எனப்படும் ஜம்மு-கஷ்மீர் மாநிலம் நம் நாட்டின் வடஎல்லையாக உள்ளது. இது 32.17 வட அட்சரேகைக்கும் 36.58 வட அட்சரேகைக்கும் இடையிலும் கிழக்கு தீர்க்க ரேகைகளான 37.26 - 80.30க் கும் இடையே பரவியுள்ளது.

இதன் மேற்கே பாகிஸ்தானும் ஆப் கானிஸ்தானும் உள்ளன. கிழக்கில் சீனாவும் தெற்கே இமாசலப் பிரதேச மும் உள்ளன. பரப்பளவில் ஆறாவது இடத்தையும் மக்கள்தொகையில் பதினேழாவது இடத்தையும் இது நம் நாட்டு மாநிலங்களில் பெறுகிறது. இந்த வடமாநிலத்தில் மூன்றுவித தட்பவெப்பநிலையைக் காணலாம். குளிர் பாலைவனப் பகுதியான லடாக் சமதட்பவெப்பநிலை கஷ்மீர் பள்ளத் தாக்கு சற்று வெப்பமாக உள்ள ஜம்மு அம்மூன்று பகுதிகளாகும். தரை மட்டம் ஆயிரம் அடியிலிருந்து 20250 வரை திடீர்திடீரென உயர்ந்துள்ளதை இம்மாநிலத்தில் காணலாம்.

ஜம்மு, கஷ்மீர் மாநிலம் ஒன்றுதான் இரு தலைநகர்களைக் கொண்டது. கோடையில் ஸ்ரீநகரும் குளிர்காலத் தில் ஜம்முவையும் தலைநகர்கள். உருது, கஷ்மீரி, ஹிந்தி, டோக்ரி, பஹாடி, லடாகி என்பன இம்மாநிலத் தில் பேசப்படும் மொழிகள்.

# சிரிக்கும் மீன் ஒரு புதிரே!

கஷ்மீரின் மன்னன் பிரோஜ்ஷா. அவனது மனைவி ஷகீலா. ஒருநாள் மீனவப் பெண் ஒருத்தி மீன் விற்றுக் கொண்டிருப்பதைத் தன் மேல் மாடத்திலிருந்து பார்த்தாள். மீன் கூடையில் ஓர் அதிசய மீனை அவள் கண்டாள். உடனே அவள் மீனவப் பெண்ணைக் கூப்பிட்டு ''உன்னிடம் பெண் மீன் இருக்கிறதா?'' என்று



கேட்டாள்.

மீனவப் பெண்ணும் "இல்லை அரசியாரே! என்னிடம் இருப்பன யாவும் ஆண் மீன்களே!" என்றாள். அப்போது யாரோ சிரிப்பதைக் கேட்டு அரசி திடுக்கிட்டாள். கவனித்துப் பார்த்தபோது அவ்வாறு சிரித்தது கூடையிலிருந்த விசித்திர மீன் என்று அவளுக்குத் தெரிந்தது. அவள் அந்த அதிசயத்தைத் தன் கணவனிடம் கூறினாள்.

மன்னனும் தன் அமைச்சர்களில் மிகவும் புத்திசாலி எனக் கருதப்படும் ஹுசேனிடம் "இதற்குச் சரியான விடையை நீங்கள் பதினைந்து நாட்களுள் கூறாவிட்டால் உங்கள் தலை இராது," என்றான்.

ஹுசைன் அதற்கு விடை காண ஒரு பயணத்தை மேற்கொண்டான். அவன் தன் பயணத்தின் போது பஹல்காமிற்குப் போய்க் கொண்டிருந்த ரஹ்மான் என்ற முதியவரைக் கண்டான். அவரோடு பேச்சுக் கொடுத்துக் கொண்டே அவன் வழி நடந்தான். இருவரும் நடந்து கொண்டே இருந்ததால் கால்கள் வலித்தன.

அப்போது ஹுசேன் "நாம் இருவரும் ஒருவரை மற்றவர் தூக்கிக் கொண்டு நடந்தால் சிரமம் தெரியாது இருக்குமே" என்றான். ரஹ்மானும் அதுகேட்டு இதென்ன வேடிக்கை என எண்ணினார். அப்போது அறுவடைக்குத் தயாராக உள்ள ஒரு வயலின் வழியே சென்று கொண்டிருந்தார்கள். அப்போது ஹுசேன் "இந்த தானியம் சாப்பிடப் படுகிறதா அல்லது இல்லையா?" என்று கேட்டான். அதைக் கேட்ட ரஹ்மான் திகைத்தவராய் "எனக்குத் தெரியாது" என்றார்.

மாலையாகும்போது அவர்கள் இருவரும் ஒரு கிராமத்தை அடைந்தார்கள். அவர்கள் ஒரு மசூதிக்குள்



சென்றபோது யாருமே அவர்களை வரவேற்கவும் இல்லை. வணக்கமும் செலுத்தவில்லை.

அப்போது ஹுசேன் "இந்த மயானத்தில் நாம் என்ன செய்யப் போகிறோம்?" என்றான். ரஹ்மானோ "இங்கு மனிதர்கள் உயிருடன் இருப்பதைப் பார்க்கவில்லையா? இதுவா மயானம்!" என்று திருப்பிக் கேட்டார்.

# சுற்றுலா இடங்கள்



'உலகில் சொர்க்கம் என்று ஒன்று இருக்கிறது என்றால் அது இங்குதான் உள்ளது' என்று பொருள்படும் வாசகங்களை டில்லி செங்கோட்டை யில் உள்ள தீவானே ஆம் மண்டபத்தில் காணலாம். ஆனால் கஷ்மீரைப் பார்க் கும் சுற்றுலாப் பயணிகள் யாவரும் இந்த வாசகங்களை நினைவுபடுத்திக் கொள்கிறார்கள். யாவரும் இந்த மாநிலத்தை உலகின் சொர்க்கம் என்றே குறிப்பிடுகிறார்கள்.

பனிபடர்ந்த மலைகளும் கண்கவர் பள்ளத்தாக்குகளும், குங்குமப்பூ மற் றும் பல வண்ணங்களில் மலர்கள் பூத்துக் கிடப்பது என பல அழகிய காட்சிகளைக் கூறிக்கொண்டே போகலாம். இங்குள்ள 'தால் ஏரி' பரந்த நீர்ப்பரப்புடைய உலகப் புகழ்பெற்றவர். கஷ்மீர் என்ற மகுடத்தில் பதிக்கப்பட்ட வைரம் என வர்ணிக்கப்படுகிறது. இதில் ஷிகாராக்களும படகுவீடுகளும் ஏராளமாக உள்ளன. இந்த ஏரியின் கரையின் இயற்கைக் காட்சிகள் சில கிலோ மீட்டர்களுக்கு ஒருமுறையாக மாறி மனதைக் கவர்கின்றன. கரையில் பல பூங்காக்களும் அமைந்துள்ளன.

இம்மாநிலத்து மலைகளில் ஏறுவதும், பனிபடர்ந்த மலைப் பரப்புகளில் சறுக்கி விளையாடுவதும் களிப்பை அளிப்பதாகும். ஷிகாரா என்றும் உல்லாசப் படகுகளில் இங்கு ஓடும் நதிகளில் பயணம் செய்வது குதூகலத்தை அளிக்கும்.

அங்கிருந்து அவர்கள் வெளியே வந்து ஒரு மயானத்தை அடைந்த போது அங்கு இறந்து போன ஒரு வரின் ஆத்மா சாந்தி அடைய உணவை யாவருக்கும் விநியோகித் துக் கொண்டிருந்தார்கள். அப்போது ''ஆகா! என்ன நகர வாழ்வு! இங்கு எவ்வளவு கலகலப்பாக யாவரும் இருக்கிறார்கள்!'' என்றான் ஹுசேன்.

இதைக் கேட்ட ரஹ்மான் ''இது என்ன இவன் மக்கள் உள்ள இடத்தை மயானம் என்கிறான். மயானத்தைப் பார்த்து நகரம் என்கிறான். பைத்தியம் போலப் பிதற்றுகிறானே!'' என நினைத்துக் கொண்டார்.

ரஹ்மான் வசிக்கும் ஊர் வந்தது.



கூறியதில் எல்லாம் உட்பொருள் உள்ளது. பயணத்தின் போது ஒருவர் மற்றவர் சுமப்பது என்பது ஒருவர் மற்றவருக்குக் கதைகள் கூறி வழியில் சிரமம் தெரியாமல் இருப்பது என்பதே பொருள். மசூதிக்குச் சென்ற போது உங்கள் இருவரிடமும் யாரும் பேசவில்லை, வணக்கம் தெரிவிக்கவில்லை, வரவேற்கவும் இல்லை. எனவே அங்கு மனிதர்கள் இருந்தும் அது மயானம் போலத்தான் என்பது பொருள். மயானத்தில் இறந்த ஒருவரின் நினைவாக உணவு விநியோகித்தது மனிதப் பண்பைக் காட்டியது. எனவே அதை அவர் நகருக்குச் சமம் என்றார். நம் வீடு உறுதியானதா எனக் கேட்டது.

அப்போது அவர் ஹுசேனைத் தன் வீட்டிற்கு அழைத்தார். ஹுசேனும் ''உன் வீடு போதிய பலமாக உள்ளதா?'' என்று கேட்டான். ரஹ்மானும் அதைக் கேட்டுச் சிரித்தார். வீட்டை அடைந்ததும் அவர் தன் மகள் ஜோஹ்ராவிடம் ஹுசேனைப் பற்றிக் கூறி அவன் எதையும் நேர் மாறாகக் கூறுவதாகத் தெரிவித்தார்.

அதைக் கேட்ட ஜோஹ்ரா ''அவர் அப்படி என்ன தான் கூறினார்?'' என்று கேட்கவே, ரஹ்மானும் ''மசூதியை மயானம் என்றும் மயானத்தை நகரம் என்றான். நம் வீடு உறுதியானதா என்றான். பயணத்தின் போது ஒருவரை மற்றவர் சுமந்து செல்லலாம் என்றான். இப்படிச் சொன்னது எல்லாம் பைத்தியக்காரத்தனம் தானே!'' என்றார்.

ஜோஹ்ராவோ ''இல்லை. அவர்

# ஒரு பழங்கதை

கஷ்மீர் பகுதி முழுவதும் ஒரு காலத்தில் கடல் போல ஒரு பெரிய ஏரியாக இருந்ததாம். ஒரு பயங்கர ராட்சஸன் அதில் இருந்து திரிந்து அட்டகாசம் புரிந்து வந்தானாம்.

பிரம்மாவின் பேரரான கஸ்யப முனிவரின் உதவியால் அவன் கொல்லப்பட்டான். பார்வதிதேவி தான் ஒரு மலையை அவன் மீது எறிந்தாளாம். அந்த மலை தான் ஸ்ரீநகரைச் சுற்றியுள்ள ஹரிபர்பத் எனக் கூறப்படுகிறது.

விருந்தினரைத் தங்க வைத்து உணவு அளிக்கும் அளவிற்கு வசதி படைத்ததா என்பது பொருள். எனவே அவர் நீங்கள் நினைத்தது போலப் பைத்தியக்காரர் அல்ல!'' என்றாள்.

தன் மகள் கூறிய விளக்கத்தைக் கேட்ட ரஹ்மான் ''ஆம்! உண்மையிலேயே அவர் மாபெரும் மேதைதான்!'' எனக் கூறி ஹுசைனைத் தன் மகளுக்கு அறிமுகம் செய்து வைத்தார். அவளும் அவனிடம் ''நீங்கள் இந்த நெடும் பயணத்தை மேற்கொண்டதற்கு என்ன காரணம்?'' என்று கேட்டாள். அப்போது அவன் சிரிக்கும் மீனைப் பற்றி அவளிடம் கூறினான்.

ஜோஹ்ரா ''ஓ! அதுவா? அரண்மனைக்குள் யாரோ ஒருவன் அரசனைக் கொல்லத் திட்டம் போடுகிறான் எனத் தெரிகிறது,'' என்றாள்.



ஹுசேன் அவள் கூறியது உண்மையாக இருக்கலாம் என எண்ணி, ரஹ்மானையும் ஜோஹ்ராவையும் அழைத்துக் கொண்டு தலைநகருக்குச் சென்றான்.

# கைவினைப் பொருள்கள்



கஷ்மீர் தரைவிரிப்புகளின் தயாரிப்பிற்குப் பெயர் பெற்றது. கைவேலையால் இவை கம்பளி, பட்டு நூல் கொண்டு பல வண்ணங்களில் தயாரிக்கப்படுகின்றன. இவை போக கஷ்மீர் சால்வைகள், பூ வேலை, காகிதத்தாலான பொருள்கள், மர வேலை, கூடை முடைதல் போன்றவை குறிப்பிடத்தக்கவை.

கஷ்மீர் சால்வைகளில் செய்யப்படும் பூ வேலைகள் அழகானவை. இச் சால்வைகளில் ஷாஸ்தூஷ் வகையைக் குறிப்பிட்டுக் கூறலாம். இவை மிருதுவாயும் குளிரைத் தடுத்து வெப்பமுடன் இருக்கச் செய்பவனவாயும் உள்ளன. ஒரு மோதிரத்தில் நுழைத்துவிடக் கூடிய அளவுக்கு மெல்லிய சால்வைகள் தயாரிக்கப்படுகின்றன. தற்போது ஷாஸ்தூஷ் சால்வைகள் தயாரிக்கத் தடை உள்ளது. ஏனெனில் இச்சால்வைகளைத் தயாரிக்க ஷாஸ்தூஷ் ஆடுகளின் ரோமம் தேவைப்படுகிறது. இந்த ரக ஆடுகள் நாளுக்கு நாள் குறைந்து வருவதால் இத்தடை விதிக்கப்பட்டுள்ளது.

ஹுசேன் அரசனிடம் மீன் ஏன் சிரித்தது என்பதை ஜோஹ்ரா விளக்குவாள் என்றான். ஜோஹ்ராவும் ''அந்த மீன் முக்காலத்தையும் அறிந்துள்ள ஞானி. அது தோற்றத்தைக் கண்டு மயங்க வேண்டாம் என்றும் தங்கள் அரண்மனையில் ஓர் ஆண் பெண் வேடம் அணிந்து கொண்டு திரிகிறான். அவன் உங்களைக் கொல்லத் திட்டம் போட்டிருக்கிறான் என்பதைத் தெரிவிக்கவே சிரித்தது,'' என்றாள்.

மன்னனும், ''இதை எப்படிக் கண்டுபிடிப்பது?'' என்று ஜோஹ்ராவிடம் கேட்கவே, அவளும் ''இதற்கு ஒரு வழியைச் சொல்கிறேன். அப்படித் திரிபவனைக் கண்டறிய ஒரு பெரிய குழி தோண்டி அரண்மனையில் பணிபுரியும் எல்லாப் பெண்களையும் தாண்டும்படிக் கூறுங்கள்,'' என்று யோசனை கூறினாள். அதன்படி மன்னன் செய்யவே, ஒரே ஒரு பெண்ணைத் தவிர மற்றவர்களால் தாண்ட முடியவில்லை. அந்தக் குழியைத் தாண்டியவள் பெண் வேடத்திலுள்ள ஆண் என்பது கண்டுபிடிக்கப்பட்டது. அவன் உடனே சிறையில் அடைக்கப்பட்டான்.

அரசி ஷகீலாவும் மன்னன் பிரோஜ் ஷாவும் மகிழ்ந்து ஜோஹ்ராவைப் பாராட்டிப் பரிசுகள் அளித்தார்கள். ஜோஹ்ரா ஹுசேனை மணந்து கொண்டாள்.

ரஹ்மானும் அத்திருமணத்தால் முழு மனநிறைவு பெற்றார்.

## வாசனைத் திரவியம்

குங்குமப் பூ கஷ்மீரில் ஸ்ரீநகரை ஒட்டியுள்ள பாமபூர் பகுதியில் ஏராளமாகக் கிடைக்கிறது. உலகிலேயே குங்குமப் பூ கஷ்மீரிலும் ஸ்பெயினிலும் தான் கிடைக்கிறது. இந்தப் பூ ஆண்டில் ஒரு மாத காலத்திற்குத் தான் மலரும் இந்த மலர் உலர வைக்கப்பட்டால் நல்ல சிவப்பாக ஆகிவிடும. இந்தக் குங்குமப் பூ வாசனைத் திரவியங்களிலேயே மிகவும் அதிக விலையானது.

கஷ்மீரின் தட்பவெப்பநிலை பாதாம் விளைச்சலுக்கு ஏற்றது. இம்மாநிலத்தில் பாதாம் மரங்களை ஏராளமாய் காணலாம்.





# கடன் பெயர்ந்தது!

ரகுபதி பிறர் மனதைச் சட்டென அறிந்து கொள்பவன். ஒருமுறை அவனுக்கு அவசரமாக ஆயிரம் ரூபாய் தேவைப்பட்டது.

அடுத்த ஊரிலுள்ள ஐயாசாமியிடம் கேட்டு வாங்கி வரலாம் என்றெண்ணி அவன் அவ்வூருக்குச் சென்றான்.

தான் வந்த காரணத்தை அவன் தன் நண்பனிடம் கூறவே, ஐயாசாமியும் ''அடாடா! இப்போது என் கையில் பணம் இல்லையே. எனக்கே இரண்டாயிரம் ரூபாய் தேவைப்படுகிறது. அதை யாரிடம் கேட்டு வாங்குவது என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன்,'' என்றான்.

ரகுபதியும் ''என் ஊர் மிகச் சிறியது. யாரும் கடன் கொடுக்கும் நிலையில் அங்கு இல்லை. இந்த ஊரோ பெரியது. இங்கு உனக்குக் கடன் கொடுத்து உதவ ஒருவன் கூட இல்லையா?'' என்று கேட்டான்.

ஐயாசாமியும் ''என் நண்பன் ஒருவன் இருக்கிறான். பெயர் சபேசன். கொஞ்சம் மண்டைக் கர்வம் பிடித்தவன். அவனைத் தனியாகக் கண்டு பேசி கடன் வாங்கிவிட முடியாது. ஆனால் நன்கொடை கேட்டு நாலைந்து பேர் போனால் தாராளமாக ஆயிரக் கணக்கில் நன்கொடை கொடுத்து அனுப்புவான். அவனிடம் எப்படிக் கடன் கேட்பது என்று தான் யோசிக்கிறேன்,'' என்றான்.

அதைக் கேட்ட ரகுபதி ''கவலைப் படாதே. அவனைப் பற்றி நீ கூறியதிலிருந்து அவன் மனம் எப்படிப் பட்டது என்று புரிந்து கொண்டு விட்டேன். அவனிடமிருந்து நீ ஐயாயிரம் ரூபாய் கடன் வாங்க ஏற்பாடு செய்கிறேன்,'' என்று கூறி விட்டு சபேசனின் வீட்டிற்குச் சென்றான். அப்போது சபேசன் தன் தோட்டத்தில் பூச்செடிகளுக்குத் தண்ணீர் விட்டுக் கொண்டிருந்தான்.

ரகுபதி அங்கே போனதுமே ''ஆகா!

- சுவாமி சங்கரராம் -

எவ்வளவு வகையான மலர்ச் செடிகள்! நீங்கள் மிகவும் சிரமப்பட்டு இவற்றைக் கவனித்துப் பாதுகாத்து வருகிறீர்கள். இது பாராட்டப்படத் தக்க விஷயம்,'' என்றான்.

திடீரென யாரோ வந்து தன்னைப் பாராட்டுவதைக் கண்ட சபேசன் திரும்பிப் பார்த்து, ''நீங்கள் யார் என்று தெரியவில்லையே!'' எனக் கேட்டான்.

ரகுபதியும் ''நானும் உங் களைப் போலப் பூச்செடிகளை வளர்ப்பதில் ஆர்வம் கொண்டவன். இவ்வூர் ஐயாசாமியின் நண்பன். உங்கள் தோட்டத்தில் அபூர்வப் பூச்செடிகள் இருப்பதாக ஐயாசாமி கூறினான். அதனால் அவற்றைப் பார்க்க வந்தேன். ஆகா! நான் தேடும் கருப்பு ரோஜா இருக்கிறதே,'' என்றான் ஒரு செடியைச் சுட்டிக் காட்டியவாறே. சபேசனும் ''ஆமாம். ஒன்று இருக்கிறது. ஆனால் அதற்கு என்ன சிறப்பு?'' என்று கேட்டான்.

ரகுபதியும் ''என்ன அப்படிக் கேட்டுவிட்டீர்கள்? உங்களுக்குத் தெரியாதா? இந்தக் கருப்பு ரோஜா மலரைப் பறித்து பத்து பேர்களின் கைகளில் வைத்து எடுத்து ஒரு சொம்பு நீரில் ஒரு நாழிகை நேரத்திற்கு ஊற வைத்து அந்த தீர்த்தத்தை அந்த பத்து பேர்களுக்கும் பய பக்தியுடன் கொடுத்தால் புண்ணியம் கிடைப்பதோடு முடிவில் கைலாசத்தையும் அடையலாம்,'' என்றான்.



சபேசனும் "அப்படியா! இன்றே அதைச் செய்துவிடலாம். நீங்கள் போய் ஐயாசாமியை அழைத்து வாருங்கள். நான் ஏழு பேர்களை வரவழைக்கிறேன். என்னையும் சேர்த்து மொத்தம் பத்துப் பேர் களாகிவிடுவார்கள். நான் எல்லோர் கைகளிலும் கருப்பு ரோஜா மலரை வைத்து நீரில் ஊற வைத்து அந்தத் தீர்த்தத்தை எல்லோருக்கும் கொடுத்து புண்ணியம் சம்பாதித்துக் கொள் கிறேன்" என்றான்.

ரகுபதியும் அங்கிருந்து போய் ஐயாசாமியை அழைத்து வந்தான். அதற்குள் சபேசனும் அக்கம்பக்கத் திலிருந்து ஏழு பேர்களை வர வழைத்துவிட்டான்.

யாவரும் வந்து சேர்ந்தபின் சபேசன் கருப்பு ரோஜா மலரைப் பறித்து ஒவ்வொருவர் கையிலும் வைத்து எடுத்து சொம்பு நீரில் போட்டான்.

ஒரு நாழிகை கழியட்டும் என அவன் காத்திருந்தான். மற்றவர்களை யும் அங்கேயே இருக்கும்படியும் வேண்டிக் கொண்டான். அப்போது ரகுபதி முன்பே சொல்லி வைத் திருந்தபடி ஐயாசாமி சபேசனிடம் "சபேசா! எனக்கு ஐயாயிரம் ரூபாய் கடனாகக் கொடுத்து உதவுகிறாயா?" என எல்லோர் முன்னிலையிலும் கேட்டான்.

சபேசனும் "உனக்கா இல்லை என்பேன்? நீ என் ஆருயிர் நண்பன். நீ கேட்டு நான் மறுப்பேனா?" எனக் கூறி, உள்ளே போய் ஐயாயிரம் ரூபாய் எடுத்து வந்து ஐயாசாமியிடம் கொடுத் தான். அதற்குச் சற்று நேரத்திற்குப் பின் சபேசன் எல்லோருக்கும் தீர்த் தத்தை கொடுத்து அனுப்பினான்.

வீடு திரும்பும் வழியில் ஐயாசாமி ரகுபதியிடம் "இது அதிசயமே! சபே சன் கடன் கொடுத்துவிட்டானே!" என்றான்.

ரகுபதியும் "இதில் அதிசயம் எதுவும் இல்லை. பத்து பேர் இருக் கையில் பணம் கேட்டால் சபேசன் பெருமையுடன் அதைக் கொடுப் பான். தனிமையில் அவனிடம் பணம் கேட்டால் அவன் கொடுக்க மாட் டான். இதுதான் அவன் மனஇயல்பு," என்றான் சிரித்துக் கொண்டே.





# விநாயகர்

ஆகாசவாணி அப்போது, ''விக்கின விநாயகா! இப்போது கஜாசுரனை நீ அழித்ததன் நினைவாக கணபதி நவராத்திரி உற்சவங்களைச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். இனி இவ்வித விழாக்கள் நடத்துபவர்கள் உன் அருள் பெற்று தாம் எண்ணிச் செய்யும் வேலைகளில் வெற்றியும் பெறுவார்கள்,'' என ஒலித்தது.

மகாவிஷ்ணு அப்போது பிள்ளையாரிடம், ''பார்வதி புத்திரனே! உன்னை என் மருமகன் எனக் கூறி எனக்கு வேறொரு பொறுப்பையும் சுமத்திவிட்டாயே!'' என்றார். பிள்ளையாரும், ''தாய்மாமன் என்ற உறவில் வரும் கம்சனை நீங்கள் கிருஷ்ணாவதாரம் எடுத்து கொல்லத்தானே போகிறீர்கள். எனவே உறவு என்பதால் எதுவும் ஆகியும் விடாது. அழியாமலும் இராது,'' என்றார்.

மகாவிஷ்ணுவும் ''பேஷ்! கஜாசுரனின் மீது அமர்ந்து அவனை நீ ஒழித்தபோது உன் சிறிய உருவத்தைக் கண்டு நான் எப்படிப் பூரித்துப் போனேன் தெரியுமா?'' என்றார்.

பிள்ளையாரும் ''நான் மட்டும் தான் சிறிய உருவம் எடுத்தேனா? நீங்களும் வாமனாவதாரம் எடுத்து பலிச்சக்கர வர்த்தியைப் உம் காலால் அழுத்தி பாதாள லோகத்திற்கு அனுப்பப் போகிறீர்களே!'' என்றார்.

மகாவிஷ்ணுவும் ''ஆகா! எல்லாம் நீ முன் கூட்டியே எப்படித்தான் சொல்கிறாய்!'' எனவே, பிள்ளையாரும் ''நீங்கள் தாம் அதர்மத்தைப் போக்கி



தர்மத்தை நிலைநாட்ட அவ்வப் போது அவதாரம் எடுத்துக் கொண்டு தானே இருக்கிறீர்கள் சமுதாயத்தில் பிறரைத் துன்புறுத்துவதும் மூட நம்பிக்கைகள் கொண்டதாயும் இருக் கும்போது புத்தாவதாரம் எடுத்து அஹிம்சையையும் உண்மை வழி யையும் போதிக்கப் போகிறீர்களே.

மாயாதேவியின் கனவில் என் போன்ற வெள்ளை யானை உருவம் கொண்டு கர்ப்பத்தில் புகுந்து புத்த ராகிய சித்தார்த்தரை ஈன்றெடுக்கப் போகிறார் அத்தேவியார்,'' என்றார்.

விஷ்ணு சிரித்தார். பரமாணு வடி வில் இருந்த விக்கினமோ ''விக்கின ராஜா! உம் கட்டளையை ஏற்று காளிந்தி மடுவிற்குச் செல்கிறேன்,'' எனக் கூறி விடை பெற்றுக் கொண்டு சென்றது.

விக்கினத்தின் பின்னால் வந்த மூஷிகாசுரன் நடந்ததை எல்லாம் மறைந்திருந்து பார்த்துக் கொண்டு இருந்தான்.

விக்கினத்திற்கு ஏற்பட்ட கதி தனக்கு வருமுன் பிள்ளையாரை எதிர்ப்பது என எண்ணி அவர் முன் போய் தன் சுய உருவை எடுத்து நின்று சிங்கம் போலக் கர்ஜித்தான்.

விநாயகர் பருத்துக் கொழுத்த அவனது உடலை பார்த்தார். மூஷிகா சுரனோ ''இந்தப் பார்வைக்கு பயப் படுபவன் அந்த விக்கினாசுரன். நான் அல்ல. உன் கடும்பகைவன் நான். சிங்கமாகி நான் உன் மத்தகத்தைப் பிளக்கப் போகிறேன். சிங்கம் யானை யின் விரோதி தானே!'' என்றான் அட்டகாசமாகச் சிரித்தவாறே.

பிள்ளையார் புன்முறுவல் பூத்து, ''சிங்கமாகப் போகிறாயா? அது ஜகன் மாதாவின் வாகனமாயிற்றே. அதற்கு நான் மரியாதை செய்ய வேண் டுமே!'' என்றார்.

சிங்கமாக உருக் கொண்ட மூஷிகா சுரன் பலமாகக் கர்ஜிக்க, ''சிவமே'' எனப் பிள்ளை யார் துதி செய்தார். சிவனும் சரப அவதாரம் எடுத்து வந்தார்.

சரபம் என்னும் மிருகம் சிங்கத்தை விட பலமானது. எட்டுக் கால்கள் கொண்டது. பயங்கரப் பற்களும், யானை போன்ற துதிக்கையும், பாம் பிற்கு உள்ளது போன்ற வாலும் அனல் கக்கும் வாயும் கொண்ட அந்த உருவம் பார்க்க பயங்கரமாக இருந் தது. அது தன் துதிக்கையால் எதிரே இருந்த சிங்கத்தை அடிக்க அது

பயந்து ஓடலாயிற்று, சரபமிருகமும் மறைந்தது.

அப்போது பிள்ளையார் தம் துதிக்கையை நீட்டி ஓடும் சிங்கத்தின் உடலைப் பற்றி உயரத் தூக்கினார். மூஷிகாசுரனாகிய சிங்கம் பயந்து நடுங்கியது. தேவர்கள் ஆகாயத்தில் கூடி மலர்மாரி பொழிய நாரதர் கானம் செய்யலானார்.

விஷ்ணுவோ, ''பிள்ளையாரே! இந்த சிங்கத்தை எனக்குக் கொடு. நான் வளர்க்கிறேன்'' எனவே, விநாயகரும் ''ஓ! நரசிம்மாவதாரம் எடுக்க இது பயன்படுமென நினைக்கிறீர்களா? இது எனக்கு வேண்டும். நீங்கள் நரசிம்மாவதாரம் எடுத்து இரணியனைக் கொல்லுங்கள்'' என்றார்.

துதிக்கை மூஷிகாசுரனைப் பற்றி தூக்கி மகாசுவேதை முன் கொண்டு போய்விட்டு பிடியைத் தளர்த்தி மறைந்தது. மகாசுவேதை தன் கணவனுக்கு நல்லுரைகள் பல கூறிப் பார்த்தாள். அதைக் கேளாமல் மூஷிகாசுரன் விநாயகருடன் போர் புரியக் கிளம்பினான்.

மகாசுவேதையோ தேவியைப் பிரார்த்திக்கவே, தேவியும் அவள் முன் தோன்றி ''உன் கணவன் விநாயகருக்கு எலி வடிவில் வாகனமாகப் போகிறான். நீ அவருக்கு வெண்குடையாக இருந்து உன் கண வனை விட்டுப் பிரியாமல் பிள்ளையாருடனேயே இருப்பாய்,'' எனக் கூறி மறைந்தாள்.

வஜ்ஜிரதந்தன் தான் விரும்பும் உருவை எடுக்கக் கூடியவன். இம்



முறை அவன் ராட்சஸ கழுகு போல மாறி வழியில் தென்பட்ட இரு யானைகளைத் தன் கால் நகங்களில் பற்றிக் கொண்டு ஆகாயத்தில் பறந்து போய்க் கொண்டிருந்தான். அப்போது சிறிய கழுகாக ஒரு மரத்தின் மீது அமர்ந்திருந்த கருட பகவானின் தவத்தை அது கலைத்தது. இதனால் கருடன் அந்த ராட்சஸக் கழுகைத் தன் அலகால் கொத்தவே அது தன் சுய உருவில் கீழே விழுந்தது. கருடனோ, ''போ, போ! பிள்ளையாரின் அருள் உனக்குக் கிடைக்கும்'' எனக் கூறி விட்டுப் போயிற்று.

மூஷிகாசுரன் விநாயகரிடம் போய், ''உனக்கு இரண்டு நீண்ட தந்தங்கள் தான் உள்ளன. அவை எதற்குப் பயன்படும்? என் பற்களால் நான் வஜ்ஜிராயுதத்தைக் கூடக் கடித்துப்



தந்தமும் அவனை விடாது குத்தித் துரத்தியது. அந்த எலி எங்கு போனாலும் அது விடவில்லை. பாதாள லோகம் போயும் தந்தம் குத்துவது கண்டு பூலோகத்திற்கு வந்து வஜ்ஜிரதந்தன் அங்கும் இங்கும் ஓட, அப்போதும் பிள்ளையாரின் ஒடிந்த தந்தம் அவனை விடவில்லை.

முடிவில் அவன் பிள்ளையாரிடம் வந்து அவரது கால்களில் விழுந்து, ''ஐயோ. என்னால் வலி பொறுக்க முடியவில்லையே. காப்பாற்றுங்கள்!'' என வேண்டினான். பிள்ளையாரும் வஜ்ஜிரதந்தனான மூஷிகாசுரனுக்கு அபயம் அளித்தார். ஒரு தந்தம் ஒடிந்து போனதால் ஒரே தந்தத்துடன் இருந்த அவருக்கு 'ஏக தந்தன்' என்ற பெயரும் ஏற்பட்டது.

பொடியாக்கி அரைத்து விழுங்கி விடுவேன். கைலாச பர்வதத்தையே குடைந்துவிடுவேன். என் சக்தி எவ்வளவு என்று உனக்குத் தெரியுமா?'' என்றான்.

பிள்ளையாரும் ''சரிதான் நீ சொல்வது. இந்த தந்தம் இருந்து என்ன பயன்?'' எனக் கூறி ஒரு தந்தத்தை தூர எறிவது போல வஜ்ஜிரதத்தன் மீது எறிந்தார். அது அவனது உடலில் பாய்ந்து குத்தலாயிற்று. அவனது உடலிலிருந்து ரத்தம் கசியலாயிற்று. மகாசுவேதை அது கண்டு தன் நினைவு இழந்து விழுந்து விட்டாள்.

வஜ்ஜிரதந்தன் ஒரு சிறிய எலியாக மாறி பூமிக்குள் வளை செய்து கொண்டு ஓட, ஒடிந்த பிள்ளையாரின்

விநாயகர் மூஷிகாசுரனை பார்க்கவே அவன் ''பிள்ளையாரே! எனக்கு உங்கள் தந்தம் அறிவைக் கொடுத்து விட்டது. நான் உங்களது வாகனமாக இருந்து மகிழ்கிறேன்'' எனக் கூறி மிகப் பெரிய எலியானான்.

பிள்ளையாரும் அதன் மீது தன் பாதத்தை வைத்து அழுத்த அது 'கீச்' 'கீச்'செனக் கத்தி சிறிதாகி சுண்டெலியாகியது. அது விநாயகரை மிகச் சுலபமாகத் தூக்கித் திரியலாயிற்று. சுண்டெலியாகியும் அதன் முந்தைய பலம் அதற்கு இருந்தது.

இதற்குள் நினைவிழந்து விழுந்த மகாசுவேதை உணர்வு பெற்றாள். அவள் எழுந்து விநாயகரை வணங்கி ''சுவாமி, என் கணவர் தங்களது வாகனமாகி விட்டார். நான் வெண்



குடையாகித் தங்களுக்குப் பின்னால் இருந்து நிழல் கொடுக்கிறேன்'' என்று வேண்டினாள்.

விநாயகரும் ''ஆகா! அப்படியே ஆகட்டும்'' எனக் கூறி அவர் எலியைப் பார்த்து ''வஜ்ஜிரதந்தா! தேவி அருளியபடி உன் மனைவி எனக்குக் குடையாகி உன்னோடு என்னருகே இருப்பாள். நீ எனக்கு பக்தர்கள் படைக்கும் நைவேத்தியப் பொருள்களை உண்டு திருப்தி அடைந்து கொள். தேவாதி தேவர்கள் என்முன் வந்து தலையில் மூன்று குட்டுகள் குட்டி, தம் காதுகளைப் பிடித்துக் கொண்டு மூன்று தோப்புக் கரணங்கள் போட்டுத் தம் கன்னங்களில் மும்முறை தட்டிக் கொண்டுவிட்டு என்னை வணங்குவார்கள். அவ்வணக்கம் உன்னையும் சேரும்'' என்று கூறினார்.

வஜ்ஜிரதந்தனும் ''முன்பு தேவர்கள் என்னை இம்மாதிரித்தான் வணங்கினார்கள். இப்போதும் அப்படியே வணங்கட்டும். உங்களது வாகனமாக இருந்து உங்களோடு சேர்ந்து அவர்களது வணக்கங்களை ஏற்கிறேன்,'' என்றான்.

இதன் பின் தவளாதேவி விநாயகருக்கு வெண்குடையாகி நின்றாள். அவளது கணவன் மூஷிகவாகனமாகி விநாயகரைச் சுமந்தான். இப்படியாகக் கணவனும் மனைவியுமாகப் பிள்ளையாருக்குத் திருப்பணிகள் புரியலாயினர். மகாவிஷ்ணு பிள்ளையாரிடம் ''ஆகா! உனக்குத் தான் எப்படிப்பட்ட வாகனம் கிடைத்துள்ளது. அதைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாக உள்ளது,'' என்றார்.

அதற்கு பிள்ளையார் ''நீங்கள் கல்கி அவதாரம் எடுக்கும்போது என்

வாகனம் உங்களுக்கு வெள்ளைக் குதிரை வாகனமாக இருக்கும். உங்களை ஆகாய மார்க்கமாய் சுமந்து, பல கிரகங்களுக்குப் போய் மனிதர்கள் வாழப் பல புதிய இடங்களைக் கண்டுபிடிக்கும்'' என்றார். மகாவிஷ்ணுவும் ''பேஷ். உன் வாக்கு அப்படியே பலிக்கட்டும்'' என்றார்.

விஷ்ணுவும் ''எல்லாத் தடைகளையும் நீ தாண்டத்தான் போகிறாய். அதன்பின் கல்யாணம் தானே,'' என்றார். நாரதரும் ''ஆமாம். அதில் சந்தேகம் வேறு உள்ளதா? அப்புறம் இவரது கல்யாணம் நடந்தே தீரும்'' என்றார். பிறகு அவர் தம் வீணையை மீட்டியவாறே தம் சஞ்சாரத்தைத் தொடங்கலானார்.

சிவனாருக்கும் பார்வதிக்கும் ஏற்பட்ட பற்றுதலால் தேஜாமயமான ஒளி கிளம்பியது. அக்கினிதேவன் அதனை ஏற்று எடுத்துப் போய் சரவணப் பொய்கையில் சேர்ப்பித்தான். ஆறு பாகங்களாக இருந்த அந்த நெருப்புச்சுடர்கள் ஆறு முகங்களாகி திருக்குமரனின் அவதாரத்திற்குக் காரணமாகியது. ஆறு கார்த்திகைப் பெண்கள் குமரனை வளர்த்து பார்வதியிடமும் சிவனாரிடமும் பிறகு ஒப்படைத்தார்கள்.

குமரன் வளர்ந்து பெரியவனாக, கருடன் மயிலை வாகனமாக அளித்தான். இந்திரன் பலவித ஆயுதங்களைக் கொடுத்தான். பார்வதி சக்தி வாய்ந்த வேலை அளித்தாள். குமரன் வளர்ந்து பெரியவனாக ஆக, தாரகாசுரன் தினமும் கெட்ட கனவுகளைக் காணலானான்.

குமரன் அரும் தவம் செய்து பிரம்மஞானம் பெற்று சுப்பிரமணியன் என்ற பெயரை அடைந்தான். தூயமணி எப்படி ஒளிவிடுமோ அப்படி அறிவு ஒளி விட்டது. ஓங்கார பிரணவப் பொருளை குமரன் தன் தந்தைக்கே உபதேசித்து சுவாமிநாதன் ஆனான். அண்ணனாகிய விநாயகரும் தம்பியாகிய குமரனும் தம் தாய் தந்தை பார்வதி, பரமேசுவரனுக்கு மகிழ்ச்சியை அளித்துத் தம் ஆடல் பாடல்களால் அவர்களைக் களிப்பித்து வரலாயினர். *(தொடரும்)*





# சப்பாணியின் சாய்வு நாற்காலி

சப்பாணி தச்சு வேலையில் கை தேர்ந்தவன். அவன் பல நாடுகளுக்குப் போய் அங்கு செய்யப்பட்ட மர சாமான்களின் கலையழகைக் கண்டு அவை போலச் செய்யக் கற்றுக் கொண்டவன்.

அதனால் எங்குமே யாருமே பார்த்திராத ஒரு சாய்வு நாற்காலியை அழகிய வேலைப்பாட்டுடன் செய்து முடித்தான். அதில் உட்கார்ந்து சாய்ந்து கொண்டு அதை எப்படி வேண்டு மானாலும் சுழலச் செய்யலாம். அதில் உட்கார்ந்து ஊஞ்சலில் ஆடுவது போலவும் ஆடலாம்.

மிகவும் சிரமப்பட்டு பல வாரங் கள் உழைத்து தயாரித்த சாய்வு நாற்காலியை அப்பகுதி ஜமீன்தார ருக்கு விற்று ஐயாயிரம் ரூபாய் பெற்றுவிடலாம் என சப்பாணி எண்ணினான்.

அதனால் ஒரு நாள் அந்த சாய்வு நாற்காலியை தன் ஒற்றை மாட்டு பார வண்டியில் ஏற்றி வண்டியை ஓட்டிக் கொண்டு அவன் ஜமீன்தாரர் இருக்கும் ஊருக்குச் சென்றான்.

உச்சி வேளையில் அவன் தன் வண்டியை வழியிலிருந்த ஒரு மரத்தடியே நிறுத்திவிட்டுத் தான் கொண்டு வந்த தயிர் சாதத்தைச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். அப் போது அவ்வழியே ஒரு சாரட்டு வண்டி வந்தது.

அதிலிருந்த கனவான் சப்பாணி யின் வண்டியையும் அதிலிருந்த வேலைப்பாடு மிக்க சாய்வு நாற் காலியையும் பார்த்துவிட்டுத் தன் வண்டியை நிறுத்தச் சொன்னார். அதிலிருந்து அவரும் அவரது உதவி யாளர் போல இருந்த ஒருவரும் இறங்கி சப்பாணி இருந்த இடத்திற்கு வந்தார்கள்.

அந்த கனவான் சப்பாணியின்

- கௌரிநாதன் -



வண்டியிலிருந்த சாய்வு நாற்காலியைப் பார்த்துவிட்டு, ''ஆகா! என்ன வேலைப்பாடு! இதனை நீ செய்தாயா? விற்கக் கொண்டு போகிறாயா? என்ன விலை?'' என்று கேட்டார்.

சப்பாணியும் ''இதை நான் மிகவும் சிரமப்பட்டு பல வாரங்கள் உழைத்துச் செய்திருக்கிறேன். இப்பகுதி ஜமீன்தாரருக்குக் காட்டி இதை அவருக்கு ஐயாயிரம் ரூபாய்க்கு விற்கப் போகிறேன்'' என்றார்.

அப்போது அந்த கனவான் பலமாகச் சிரித்து, ''உன் ஜமீன்தாரர் அந்த விலைக்கு வாங்கிக் கொள்ளாவிட்டால் நீ என்ன செய்வாய்?'' என்று கேட்டார்.

சப்பாணியும் ''அவரிடம் பேரம் செய்வேன். விலையைக் குறைத்து நாலாயிரம் கொடுங்கள் என்பேன். அவர் நான் கூறும் விலைக்கு வாங்க சம்மதிக்காவிட்டால் படிப்படியாக விலையை மூவாயிரம், இரண்டாயிரம், ஆயிரம் என்று குறைத்துக் கூறிப் பார்ப்பேன். அந்த விலைக்கும் சம்மதிக்காவிட்டால் முடிவில் ஐநூறு ரூபாய் கொடுப்பதானால் உங்களுக்குக் கொடுக்கிறேன். இதற்கும் இஷ்டம் இல்லை என்றால் இதனை என் வீட்டிற்கே திரும்ப எடுத்துப் போய் நானே உபயோகித்துக் கொள்கிறேன் என்று கூறிவிடுவேன்,'' என்று சொன்னான்.

அந்த கனவானும் ''நீ இதை ஜமீன்தாரருக்குக் காட்டினால் இதை விலைக்கு வாங்கிக் கொள்வார். ஆனால் அவரிடம் நீ ஐயாயிரம் ரூபாயிலிருந்து விலையைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக் கொண்டே போவாயா? அவர் அழகான பொருள்களை மிகவும் ரசிப்பவர். ஒரு பொருள் அவருக்குப் பிடித்துவிட்டால் அதற்கு என்ன விலை வேண்டுமானாலும் கொடுப்பார்,'' என்றார்.

அவரது உதவி யாளனும் ''ஆமாம். அவருக்கே விற்றுவிடு. அவரும் வாங்கிக் கொள்வார்'' எனக் கூறி விட்டு கனவானின் பின்னாலேயே சென்று சாரட்டு வண்டியில் அவரோடு ஏறிக் கொண்டார். வண்டியும் அங்கிருந்து சென்றுவிட்டது.

மாலையான போது சப்பாணி

ஜமீன்தாரரின் அரண்மனை வாசலில் அடைந்தான்.

வாசல் காவலாளி அவனைத் தடுக்காமலும், உள்ளே போகச் சொன்னதும் சப்பாணிக்கு ஆச்சரி யத்தை அளித்தது. அவன் உள்ளே சென்றதும் ஜமீன்தாரரைக் கண்டு திடுக்கிட்டான். ஏனெனில் காலை யில் அவனுடன் பேசிய கனவான் அவரே என்பது அவனுக்குத் தெரிந்து விட்டது.

ஜமீன்தாரரும் ''என்னப்பா! என்ன சொல்ல விரும்புகிறாய்?'' என்று கேட்டார்.

சப்பாணியும் ''நான் செய்துள்ள அதிசய சாய்வு நாற்காலி பற்றிக் கேள்விப்பட்டிருக்கலாம். ஏன் அதை நீங்கள் பார்த்தும் இருக்கலாம். நான் எப்படி பேரம் செய்வேன் என்பதை மீண்டும் தங்களிடம் கூறவேண்டும் என விரும்புகிறீர்களா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்டு அவர் பக்கத்தில் நின்ற ஜமீன்தாரரின் திவான் ''நான் தான் காலையிலேயே உன்னிடம் ஜமீன்தாரர் இதை வாங்கிக் கொள் வார் என்று சொன்னேனே. நீ உன் விலையைக் கூறவும் வேண்டாம். பேரம் செய்யவும் வேண்டாம்,'' என்றார் சிரித்தவாறே.

ஜமீன்தாரரும் ''நீ என்ன விலைக்கு விற்க விரும்புகிறாய் என்பதை இன்று காலையில் நான் தெரிந்து கொண்டேனே! இந்த மாதிரி கலை யழகு மிக்க மரச் சாமான்களைச் செய்யும் திறமை படைத்தவர் ஒருவர் நம் ஜமீனில் வாழ்ந்து வருகிறார் என்பதற்காக நான் பெருமைப்படு கிறேன். நீ செய்துள்ள இந்த சாய்வு நாற்காலிக்கு எவ்வளவு கொடுத் தாலும் தகும். இதற்கு நான் பத் தாயிரம் ரூபாய் கொடுத்து வாங்கிக் கொள்கிறேன்'' என்றார்.

சப்பாணியும் ''ஐயா! நீங்கள் இஷ்டப்பட்டுக் கொடுப்பதை நான் மறுபேச்சு பேசாமல் வாங்கிக் கொள் கிறேன். அதுதான் முறையானது,'' என்று கூறி, ஜமீன்தாரர் கொடுத்த பணத்தை மகிழ்ச்சியுடன் வாங்கிக் கொண்டு தன் ஊருக்குச் சென்றான்.





# தந்திரம் பலித்தது!

ஒரு கிராமத்தில் கிருஷ்ண சாஸ்திரி என்பவர் இருந்தார். அவர் காசியில் பண்டிதர்களின் கூட்டம் ஒன்றில் கலந்து கொள்ளப் போக வேண்டி இருந்தது. தான் சேர்த்து வைத்திருந்த ஐநூறு ரூபாயை யாரிடம் கொடுத்து, தான் திரும்பி வரும்வரை பத்திரமாக வைத்திருந்து தருவதற்கு ஏற்பாடு செய்து கொள்வது என்று அவர் யோசிக்கலானார்.

மளிகைக் கடை மருதப்பனிடம் கொடுத்து வைக்கலாம் என எண்ணி அவனது கடைக்குச் சென்றார். அப் போது ஒருவன் அக்கடையில் சில சாமான்களை வாங்கிக் கொண்டு கிளம்பிக் கொண்டிருந்தான்.

அவனை மருதப்பன் கூப்பிட்டு ''என்னப்பா! பத்து ரூபாய் நோட்டைக் கொடுத்து சாமான்களை வாங்கிக் கொண்டாயே! பாக்கி சில்லரை வாங்கிக் கொள்ளாமல் கிளம்புகிறாயே!'' என்று கூறி மீதி சில்லரையைக் கொடுத்து அனுப்பினான்.

பிறகு அவன் கிருஷ்ண சாஸ்திரியிடம் ''பண விஷயத்தில் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். பிறர் பணத்திற்கு ஆசைப் படக் கூடாது. என்ன நான் சொல்வது சரிதானே!'' என்று கேட்டான்.

கிருஷ்ண சாஸ்திரியும் ''மருதப்பா! நீ சொல்வது முற்றிலும் சரியே. உன் நேர்மையையும் நாணயத்தையும் பாராட்டுகிறேன். நீ பிறரது பணத்திற்கு ஆசைப்படுபவன் அல்ல. நான் காசிக்குப் போக வேண்டும். நான் சேர்த்து வைத்திருக்கும் ஐநூறு ரூபாயை உன்னிடம் கொடுத்து வைக்கிறேன். காசியிலிருந்து வந்ததும் அதை உன்னிடமிருந்து வாங்கிக்கொள்கிறேன்,'' என்றார்.

மருதப்பனும் ''உங்கள் பணத்தை என் கையால் கூடத் தொட மாட்டேன். நீங்களே உங்கள் பணத்தை என் வீட்டில் ஓரிடத்தில் புதைத்து

25 ஆண்டுகளுக்கு முன் வெளியிடப்பட்ட கதை

வையுங்கள். காசியிலிருந்து திரும்பி வந்ததும் நீங்களே வந்த அதை எடுத்துச் செல்லுங்கள். உங்கள் பணம் என் வீட்டில் இருக்கும் வரை பத்திரமாகவே இருக்கும்,'' என்றான்.

கிருஷ்ண சாஸ்திரியும் தம் பணத்தை எடுத்துக் கொண்டு போய் மருதப்பன் வீட்டில் ஓரிடத்தில் புதைத்து வைத்துவிட்டு காசிக்குச் சென்றார். ஒரு மாதம் கழிந்தது. காசியிலிருந்து திரும்பி வந்த கிருஷ்ண சாஸ்திரி நேராக மருதப் பனின் வீட்டிற்குப் போய் அவனைக் கண்டு தன் பணத்தை எடுத்துக் கொண்டு போவதாகக் கூறினார்.

மருதப்பனும், ''ஆகா! நீங்கள் புதைத்து வைத்த இடத்திலிருந்து தோண்டி பணத்தை எடுத்துக் கொண்டு போங்கள்,'' என்றான். கிருஷ்ண சாஸ்திரியும் தான் பணத்தை வைத்த இடத்தில் தோண்டிப் பார்த் தார். பணம் இருக்கவில்லை.

மருதப்பனிடம் அதுபற்றிக் கேட் கவே, அவனும் ''எனக்கு ஒன்றும் தெரியாது. எனக்கு எதற்கு உங்கள் பணம்?'' என்று கூறி அனுப்பி விட்டான்.

கிருஷ்ண சாஸ்திரி கவலையுடன் தன் வீட்டிற்குத் திரும்பலானார். வழியில் அவரைக் கண்ட லட்சுமி பாட்டி ''சாஸ்திரிகளே! காசியில் இருந்து எப்போது வந்தீர்கள்? ஏன் கவலையுடன் இருக்கிறீர்கள்?'' என்று கேட்டாள்.

கிருஷ்ண சாஸ்திரியும் நடந்ததை



ஒன்றுவிடாமல் கூறி ''மருதப்பன் என்னை ஏமாற்றி என் பணத்தை அமுக்கிக் கொண்டுவிட்டான்'' என்று புலம்பினார்.

அதைக் கேட்ட லட்சுமி பாட்டி ''கவலைப்படாதீர்கள். இப்போதே நான் மருதப்பன் கடைக்குப் போய் பேச்சுக் கொடுத்துக் கொண்டிருக் கிறேன். அதே சமயத்தில் நீங்கள் வந்து உங்கள் பணத்தை கேளுங்கள். அவனும் உடனேயே கொடுப்பான். வாங்கிக் கொண்டு போய்விடுங்கள்,'' என்றாள். கிருஷ்ண சாஸ்திரியும் அவள் கூறிய படியே செய்வதாகக் கூறவே, பாட்டியும் போய் மருதப்பனைப் பார்த்தாள்.

அவள் அவனிடம் ''மருதப்பா! நீ நாணயஸ்தன் என்பது எல்லோருக் கும் தெரியும். நான் அறுபடை

வீடுகளிலுள்ள முருகனை தரிசிக்க நாளைக்கு இவ்வூரிலிருந்து கிளம்பப் போகிறேன். என்னிடம் இரண்டா யிரத்து ஐநூறு ரூபாய் உள்ளது. அதை நீ பத்திரமாக கிருஷ்ண சாஸ்திரியின் ஐநூறு ரூபாயை பத்திரமாக வைத் திருந்தது போல வைத்திருந்து நான் யாத்திரையை முடித்துவிட்டு வந் ததும் திருப்பிக் கொடுக்கிறாயா?'' என்று கேட்டாள்.

மருதப்பனும் 'ஆகா! இந்தப் பாட்டியையும் ஏமாற்றி அவள் பணத்தை அமுக்கிக் கொண்டுவிடு கிறேன்' என எண்ணினான். அவன் லட்சுமி பாட்டிக்கு பதில் சொல் வதற்குள் கிருஷ்ண சாஸ்திரி அங்கு வந்துவிட்டார்.

அப்போது லட்சுமி பாட்டி ''அதோ சாஸ்திரிகளே வந்துவிட் டாரே!'' எனவே, மருதப்பனும் ''சாஸ்திரிகளே! வாருங்கள். உங்கள் பணத்தை வாங்கிக் கொள்ளத் தானே வந்திருக்கிறீர்கள்? நீங்கள் என் வீட் டில் பணத்தைப் புதைத்து வைத்த இடம் அவ்வளவு பத்திரமானது அல்ல என்று எண்ணி, அதை எடுத்து நான் வேறு இடத்தில் புதைத்து வைத்திருக்கிறேன்,'' என்று கூறி வீட்டினுள் சென்று ஐநூறு ரூபாயை எடுத்து வந்து சாஸ்திரியிடம் கொடுத் தான். அவரும் அதை வாங்கிக் கொண்டு மகிழ்ச்சியுடன் சென்றார்.

அதன்பின் மருதப்பன் ''பார்த் தீர்களா என் நாணயத்தை! கிருஷ்ண சாஸ்திரி கொடுத்து வைத்திருந்த பணத்தை அவர் வந்து கேட்டதும் கொடுத்துவிட்டேன். அதுபோல நீங்கள் என்னிடம் கொடுத்து வைக் கும் இரண்டாயிரத்து ஐநூறு ரூபாயை யும் நீங்கள் வந்து கேட்கும் போது கொடுத்துவிடுவேன். பணத்தை எப் போது கொண்டு வந்து கொடுக் கிறீர்கள்?'' என்று கேட்டான்.

லட்சுமி பாட்டியும் ''இப்போது யோசித்துப் பார்த்தேன். அறுபடை வீடுகள் தரிசனத்திற்கு இந்த வருடம் போக வேண்டாம் என முடிவு செய்து விட்டேன். அடுத்த வருஷம் போகி றேன்,'' எனக் கூறி சிரித்து விட்டுப் போனாள். அந்தப் பாட்டி தன்னை ஏமாற்றி சாஸ்திரிக்குப் பணம் கிடைக் கச் செய்துவிட்டாள் என்பதை அவன் புரிந்து கொண்டு மலைத்துப் போனான்.





அம்புலிமாமா

# சந்தா படிவம்

1. நான் அம்புலிமாமாவின் கீழ்க்கண்ட பதிப்பின் சந்தாதாரராக விரும்புகிறேன்.

| | | | |
|---|---|---|---|
| ☐ ஆங்கிலம் | ☐ ஹிந்தி | ☐ மராட்டி | ☐ குஜராத்தி |
| ☐ வங்காளி | ☐ ஒரியா | ☐ அஸ்ஸாமி | ☐ தெலுங்கு |
| ☐ கன்னடம் | ☐ தமிழ் | ☐ மலையாளம் | ☐ சமஸ்கிருதம் |

2. நான் சந்தாதாரராக விரும்புவது.

☐ இந்தியாவினுள் சந்தா (மொழிப் பதிப்பு) ரூ. 120 ஓராண்டிற்கு 12 இதழ்கள்

☐ இந்தியாவினுள் சந்தா (ஆங்கிலப் பதிப்பு) ரூ. 180 ஓராண்டிற்கு 12 இதழ்கள்

☐ அயல்நாடுகளின் சந்தா ஐஎன்ஆர் 900 அமெரிக்க $20 ஓராண்டிற்கு 12 இதழ்கள் - மொழிப் பதிப்பிற்கு

☐ அயல்நாடுகளின் சந்தா ஐஎன்ஆர் 1200 அமெரிக்க $24 ஓராண்டிற்கு 12 இதழ்கள் - ஆங்கிலப் பதிப்பிற்கு

3. அனுப்பியுள்ள டி.டி. மதிப்பு ரூ. ______________________
டி.டி. நெ. ______________ வாங்கிய தேதி ______________ சென்னையில் சந்தமாமா இந்தியா லிமிடெட்டிற்குச் செலுத்தப்படுவது.

4. பிரதிகள் அனுப்பப்பட வேண்டிய பெயரும், முகவரியும் (பெரிய எழுத்துக்களில்)

______________________

______________________

______________________

______________________

5. உங்களது நண்பர்களையோ, உறவினர்களையோ அம்புலிமாமா குடும்பத்திற்கு அவர்களது பெயர்களையும் முகவரிகளையும் நீங்கள் சந்தா அனுப்புகையில் குறிப்பிட்டு அறிமுகப்படுத்தலாம்.

______________ ______________

தேதி கையொப்பம்

*இப்படிவத்தை இம்முகவரிக்கு அனுப்பவும் : சந்தமாமா இந்தியா லிமிடெட்*

82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை - 600 097

இந்தியா, டெலிபோன்/ஃபேக்ஸ் : 044-234 73 99/234 73 84

**e-mail :chandamama@vsnl.com**

**Website : http://www.chandamama.org**



அம்புலிமாமாவின்
அன்பளிப்பு
வீர தீர பராக்கிரமன் 15
ஓவியம் : பாணி
திடீரென காணாமல் போன சந்திரபுரி மன்னனைத் தேடிக் கண்டுபிடிக்க சேனாதிபதி நரேந்திரதேவன் அடர்ந்த காட்டினுள் வசிக்கும் தாந்திரீகன் நாகபந்துவின் உதவியைப் பெற அவன் வாழும் இடத்திற்குச் சென்றான். தாந்திரீகனோ தான் கூறும் நியமங்களை அவன் கடைப்பிடிக்க வேண்டும் என்று வற்புறுத்தினான்.
நடப்பனவற்றைக் கண்ட நரேந்திர தேவன் ஏதோ ஒரு சக்திக்குத் தன் மனம் கட்டுப்படுவதை உணர்ந்தான்.
தாந்திரீகன் மந்திரங்களை உச்சரிக்க முறைப்படி பூஜைகள் ஆரம்பமாயின.
ராஜரிஷி நாகபந்து-அடிகள் வாழ்க!
வாழ்க!!
ராஜரிஷி வாழ்க!
அடிகளார் வாழ்க!
வாழ்க!
நாகபந்து அடிகளார் வாழ்க!
வாழ்க! வாழ்க!!
திடீரென பக்தர்கள் ஆவேசத்துடன் நடனமாடினர். பருந்து போல வேடமிட்ட ஒரு வாலிபனைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள்.


அதன்பின் பக்தர்கள் என்ன செய்வார்கள் என்பதை அந்த வாலிபன் ஆவலுடன் பார்க்கலானான். திடீரென்று...
அனைவரும் வலி தாங்க முடியாதது போல கத்திக் கொண்டே ஒவ்வொருவரும் கீழே விழ, அவர்களது கைகளில் இருந்த பாம்புகள் தப்ப முயன்றன.
ஆ! ஐயோ!
ஐயோ! ஐயோ!!
என்ன இது! அம்மா! ஐயோ!
ஐயோ! ஐயோ!!


சில மலைச்சாதித் தலைவர்கள் வந்தனர்.
பாம்புகள் என் மீது ஊர்கின்றனவா?
என்ன நடந்தது? எழுந்திருங்கள், எழுந்திருங்கள்!
தாந்திரீகன் வேகமாக ஆலயத்திற்குள் சென்றான். அவன் பின்னால் சில சீடர்களும் சென்றார்கள்.
இது அபசகுனம். பூஜைகள் தொடர்ந்து நடக்கக் கூடாது.
ஏதோ தவறு நடந்திருக்கிறது!
கருட வேடமிட்டவனுக்கு எவ்வித ஆபத்தும் நேரவில்லை என்பதை கவனித்தாயா?
நரேந்திரதேவன் இதைச் சொல்லி முடிக்குமுன் ஒரு சீடன் ஆலயத்திலிருந்து வெளியே வந்தான்.
பூஜைகளை எல்லாம் நிறுத்திவிடுவோம். பக்தர்கள் தாம் செலுத்த வந்த காணிக்கைகளை யாக குண்டத்தில் போடும்படி குரு கட்டளை இடுகிறார்.


பக்தர்களைத் தீண்டும் பாம்பு களைக் கண்டு மலைச் சாதித் தலைவர்கள் பயந்துவிட்டார்கள்.
வாருங்கள். இந்த பயங்கர இடத்திலிருந்து போய்விடலாம்.
என்ன ஒரு பயங்கரக் காட்சி!
ஓடாதீர்கள். சற்று நில்லுங்கள். பருந்துக் குஞ்சுகளை யாக குண்டத்தில் விட்டு விடுங்கள்.
தம் கைகளிலிருந்த பருந்துக் குஞ்சு களை யாக குண்டத்தில் போட மலைச் சாதியினர் சென்றார்கள்.
ஆவேசத்தோடு ஆலயத்திலிருந்து வெளியே வந்தான் தாந்திரீகன்.
என்ன இது? பூமி அதிர்கிறதே!
நில அதிர்ச்சி கண்டு பக்தர்கள் நாலாபுறத்திலும் தலைதெறிக்க ஓடினார்கள். பருந்துக் குஞ்சுகள் பறந்து போயின.
என் எதிரி வாலிபன் வேடத்தில் வந்தான். அவன் தன்னை கருடன் என்று கூறிக் கொள்கிறான்.
வாலிபனா? கருடனா?
தொடரும்




# போட்டோ வாக்கியப் போட்டி





**இந்த போட்டோக்களுக்கு ஒவ்வொரு சொல்லாலோ, அல்லது சிறு வாக்கியங்களாலோ தொடர்புடையதாக எழுதி அனுப்புங்கள்.**

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25ந் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/-

போட்டி முடிவு ஆகஸ்ட் 2002 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா,
எண்: 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி,
ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

வாழ்த்துக்கள்

ஏப்ரல் 2002 இதழில் வெளியிடப்பட்ட
போட்டியில் வெற்றி பெற்றவர்:

ஜி. தேவகுரு
*18, கிரசன்ட் நகர்,
பள்ளிப்படை,
சிதம்பரம் - 608 001.*

பரிசு பெற்ற வாக்கியங்கள்



அளந்தாலும் மணம் உண்டு
பிழிந்தாலும் சுவை உண்டு

*அம்புலிமாமா வருட சந்தா :*

*இந்தியாவில் ரூ.120/-*

Payment in favour of CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 600 026 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : Viswam



பார்த்தவர்கள் பாராட்டும்
பாசத் தொடர் - பரிசுத் தொடர்.
பெண்களுக்காகவே
பல பரிசுத் திட்டங்கள்:
ஜெயா டி.வி.யிலே எங்க வீட்டுப் பெண் தொடரை தொடர்ந்து பாருங்கள்.
போட்டியில் கலந்து கொள்ளுங்கள்...
பரிசுகளை வெல்லுங்கள்...
B. நாகிரெட்டி வழங்கும்
விஜயா வாஹினி டெலிபிலிம்ஸ்
எங்க வீட்டுப் பெண்
JAYA TV
ஜெயா டிவியில்
ஒவ்வொரு திங்கட்கிழமை
இரவு 8.30 மணி முதல் 9 மணி
வரையில் குடும்பத்துடன்
கண்டுமகிழுங்கள்!

AMBULIMAMA (Tamil) JUNE 2002 Registrar of Newspaper for India No. 1095/57
Registered No. TN/CPMG-839/2002

